வெளியீடு எண் 144.

# நேபாளமும் - கேதாரமும்






திருவாவடுதுறை ஆதீனம்

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

திருக்கயிலாயபரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனத்துப்

பிரதம பரமாசாரியர்

# ஸ்ரீ பஞ்சாக்கரதேசிகமூர்த்திகள்

# நிறைபணிவிழாமலர்

சார்வரி—புரட்டாசி—அசுபதி.

6—10—1960

வெளியீடு எண் 144

உ
சிவமயம்

# நேபாளமும் - கேதாரமும்

இஃது

திருக்கயிலாயபரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனத்து
இருபத்தொன்றாவது குருமகாசந்நிதானம்
ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணியதேசிக பரமாசாரிய சுவாமிகள்
கட்டளையிட்டருளியபடி
வெளியிடப்பெற்றது.

திருவாவடுதுறை ஆதீனம்
1960



திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம்
இருபத்தொன்றுவது குருமகாசந்நிதானம்
ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணியதேசிக பரமாசாரிய சுவாமிகள்

உ
சிவமயம்

# முகவுரை

"மன்னுதிருக் கேதாரம் வழிபட்டு மாமுனிவர்
பன்னுபுகழ்ப் பசுபதிநே பாளத்தைப் பணிந்தேத்தித்
துன்னுசடைச் சங்கரனார் ஏற்றதூ நீர்க்கங்கை
அன்னமலி அகன்றுறைநீர் அருங்கரையின்
[மருங்கணைந்தார்"

—திருமூலநாயனார் புராணம்.

யாத்திரை என்று சொல்லுகின்றபோதே இளைஞர் முதல் முதியவர்வரை ஒவ்வொருவரும் தாம் அடைகிற ஆனந்தத்திற்கு அளவில்லை!. சிலருக்குத் தனித்தும் பலருக்குக் கூட்டத்துடனும் யாத்திரைசெல்ல விருப்பம் உடையவர்களும் இருக்கின்றார்கள். உலகியலறிவைப் பெறவிரும்புபவர்கள் தனித்தே செல்வார்கள்; மூர்த்தி, தலம், தீர்த்தம் இவைகளைக்கண்டு உண்மைஞானம் அடைய விரும்புபவர்கள் ஒத்த அறிவுடைய பலருடன் சேர்ந்தே சமயத்துறையில் யாத்திரை செய்வார்கள். இவ்விருபிரிவினர்களும் அடையும் பயனைக் கவனிக்கும் பொழுது, முதலாமவர் இம்மைப்பயனை அடைவர்; இரண்டாமவர் இம்மைப்பயனோடு மறுமைப்பயனையும் அடைவர். ஆகையால் சமயத்துறையிலே பலருடன் கூடிச்செல்லும் யாத்திரையே சாலச்சிறந்தது.

மேலும், யாத்திரை என்பது நம் சமுதாயத்துக்குப் புதுமையானதன்று; பழமையானதேயாகும். சைவப் பெரியார்களும் ஏனைய மதத்தலைவர்களும் யாத்திரையை மேற்கொண்டார்கள்; நமக்கும் வழிகாட்டியுள்ளார்கள். அவர்களது அடிச்சுவட்டின்வழியிலே நாளிதுவரை மக்கள் யாத்திரையை நடத்திவருகின்றார்கள். யாத்திரைக்கு வேண்டிய பல சாதனங்களிருந்தும் அவைகளைக் கைக்கொள்ளாமல் உடல் வருந்தும் முறையில் நடையினாலேயே அநேகமாய் யாத்திரை செய்வார்கள்; இது வைதிகர்கள் கண்ட முறை. இலௌகிகர்கள், சாதனங்களின் மூலமாக உடல்வருந்தாத முறையில் பலவித சௌகர்யங்களுடன் யாத்திரை செய்வார்கள். 'துன்பத்தின் முடிவில்தான் இன்பம்' என்று கண்ட அநுபவப் பெரியார்கள் உடலைவருத்தியே இறைவனைக் காண ஆசைப்படுவார்கள்; இறைவனும் அவர்களது மனஉறுதியினையும் பக்குவநிலையையும் கண்டு அருள் கொடுக்க முற்படுவான் அல்லது வெளிப்படுவான்.

'நேபாளம்' என்பது நம் தேசத்தின் வடகிழக்கில் உள்ள தேசம்; மலைநாடும் ஆகும். 'காட்மாண்ட்' என்பதே அதன் தலைநகரம். நேபாள அரசர் பசுபதிநாதரிடத்தில் மிக்க அன்பும் பக்தியும் கொண்டவர் என்பது நேரேசென்று கண்டவர்களே அறியத்தக்கது. அரசருடைய கிரீடத்தில் பசுபதிநாதரின் திருவடிகளைப் பதித்திருத்தலே அதற்குச் சான்றாகும்.

ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள் திருவாவடுதுறையிலிருந்து 12-5-58-ல் உந்தூர்தியில் புறப்பட்டு 5-6-58ல். நேபாளத்திலுள்ள ஸ்ரீ பசுபதிநாதரைத்

தரிசித்தார்கள். நேபாளம் செல்லும் வழியைப்பற்றி நூலில் விளக்கப்பட்டிருக்கின்றது. பசுபதிநாதருக்கு நடக்கும் நித்திய நைமித்திகங்களை அங்கு சென்று தரிசிப்பது கண்கொள்ளாக் காட்சியாக இருக்கும். நிற்க,

கேதாரம் என்னும் தலம் வடநாட்டிலுள்ள இமய மலையில் அமைந்துள்ளதாகும். கயிலைமலையின் ஒரு பகுதியே திருக்கேதாரமாம். ஆறுமாதகால அளவுதான் அங்கு மக்கள் பூசை; ஏனைய ஆறுமாதகாலம் தேவ பூசையாகும். பனியால் ஆலயம் மூடப்பட்டுவிடுமாதலால் கேதாரநாதனை மக்கள் கண்டு தரிசிக்கமுடியாது. நவம்பர் மாதம் முதல் ஏப்ரல் மாதம் முடியும்வரை கேதாரத்திலுள்ளவர்கள் இருபது மைலுக்குக் கீழுள்ள இடங்களில் வந்து தங்கிவிடுவார்கள்; சிலர் ரிஷிகேசம் முதலிய இடங்களுக்கும் வந்துவிடுவார்கள்; ஆகவே, மேமாதம் தொடங்கி அக்டோபர் மாதம் முடிய ஆறு மாதகாலமே கேதாரயாத்திரைக்கு உரியது. ஏப்ரல் கடைசியிலேதான் வழிகளைச் சீர்படுத்திக் கோயிலைத் திறப்பார்கள். இந்த யாத்திரையைத் துணைகொண்டு தான் நடத்தவேண்டும்.

ஆகவே, ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகாசந்நிதானமவர்கள் ஸ்ரீ கேதாரேசுவரரையே ஆத்மார்த்தமான துணையாகக் கொண்டு, எங்களுக்கும் அவனருள் கிடைக்கவேண்டுமென்ற பெருங்கருணையுடன் எங்கள் அனைவரையும் உடன் அழைத்துச்சென்றார்கள். நாங்களும் குருமகா சந்நிதானம் அவர்களின் திருவடிகளைத் துணையாகக்

கொண்டு பின் சென்ருேம்; யாது பயன்? குருவருளால் இறைவன் திருவருளேப் பெற்ருேம்; பேரானந்தத்தை யும் அடைந்தோம்.

"யான்பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்" என்பதற்கிணங்க, பலரும் நேபாளம், கேதாரம் இவ்விரு தலங்களின் யாத்திரையை மேற்கொண்டு ஸ்ரீ பசுபதி நாதர் திருவருளேயும் ஸ்ரீ கேதாரநாதரின் திருவருளே யும் பெற்று உய்ய, அடியேனுல் குறித்த குறிப்புப்படி இந்நூலே குருமகாசந்நிதானம் அவர்களின் ஆஃணயின் வண்ணம் வெளியிடப்பட்டிருக்கிறது.

இருதலங்களின் யாத்திரையை மேற்கொள்ளும் அன்பர்கட்கு இந்நூல் சிறிதளவாவது பயனளிக்கும் எனக்கருதுகிறேன்.

இப்பணிக்கு அடியேஃன ஆளாக்கிய ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகாசந்நிதானத்தின் பொன்ஞர் திருவடிகளுக்கு என்றென்றும் கடப்பாடுடையேன்.

இங்ஙனம்,

சித்தாந்தசைவமணி—

திருவாவடுதுறை<br>5—10—1960 } **ரு. ச. மீனுட்சிசுந்தரம்பிள்ளே,**

ஆதீனவித்துவான்.

உ
சிவமயம்

# நேபாளமும் - கேதாரமும்

" செயற்கரிய செய்வார் பெரியர்; சிறியர்
செயற்கரிய செய்கலா தார் "

*—திருக்குறள்.*

மக்கட் பிறப்பு உயர்ந்தது. மக்கள் உடம்பு படைத்தாரும் பலர்; ஆயினும், மக்கட் பண்பு படைத்தார் மிகச் சிலரே. மக்கள் உடம்பு படைத்தமையால் மட்டும் ஒத்துக்காணப்பட்டாலும் மக்கட் பண்பினால் வேறுபட்டார் பலரையும் காண்கின்றோம். மக்கட் பண்புடையார், செய்தற்கு எளியவற்றைச் செய்யாமல் பிறரால் செய்தற்கு அரிய செயல்களையே செய்வர். அதனால் இம்மைப்பேறு மறுமைப்பேறுகளைப் பெற்று இன்புற்று வாழ்வர். அரிய செயல்களாவன. இயமம் நியமம் முதலாகிய எண்வகை யோக உறுப்புக்கள் என்பர் பரிமேலழகர். அரிய செயல்கள் ஈண்டுச் சிவ புண்ணியங்களே. சிவபுண்ணியங்களாவன: சரியை, கிரியை, யோகம், இவற்றின் நிகழும் ஞானம் என நால்வகைப்படும். சிவதலயாத்திரை என்பதும் இச் சிவபுண்ணியத்தைச் சார்ந்ததேயாம்.

பெறுதற்கரிய மக்களுடம்பு படைத்தார் யாவரும் தத்தம் மனம் வாக்குக் காயங்களினால் இறைவனை

வழிபடுதல்வேண்டும். சமயகுரவர்களாகிய நால்வரும் நாமெல்லாம் உய்யவேண்டி, சிவதலயாத்திரை செய்து மக்களுக்குச் சிவவழிபாட்டால் உண்டாகும் நன்மைகளைத் தெள்ளத்தெளிய விளக்கிக்காட்டியருளினர்; சைவசமயமே சற்சமயமெனவும், சமயாதீதமெனவும் போதித்தனர்; சமயாதீதமாக விளங்கும் சைவசமயத்திற்குப் பரம்பொருள் சிவபெருமானே என்றும் காட்டினர்; சாமானியரும் அறிந்து உய்யுமாறு பற்பல அற்புதச் செயல்களால் 'சிவபெருமான் ஒருவரே பரம்பொருள்' என்னும் உண்மையை நிரூபித்தும் காட்டியருளினர். அந்த நால்வரும் சென்ற நன்னெறியிலேயே நாமும் செல்லுதல் அவசியம். சமயகுரவர்களும், சைவசமயத்தில் தோன்றிய அடியார்களும் தலயாத்திரை செய்தனர். சமய குரவர்கள் தாம் சென்று வழிபட்ட தலங்கட்குப் பதிகங்களும் அருளிச்செய்தனர். இறைவன் முழுமுதற்றன்மையும், அப்பெருமான் அடியார்கட்கு அருள்செய்தவாறும், அடியார்கட்கு இறைவர் எளிவந்ததன்மையும், தலக்குறிப்புக்களும் பதிகங்களில் காணப்படுவன. சம்பந்தர் அப்பர் சுந்தரர் என்னும் மூவர் அருளியன தேவாரத் திருப்பதிகங்கள். மாணிக்கவாசக சுவாமிகள் அருளியது திருவாசகம். முதன் மூன்று திருமுறைகள் சம்பந்தர் அருளியன. நாவுக்கரசர் அருளியன நான்கு ஐந்து ஆறுந்திருமுறைகள். ஏழாந்திருமுறை சுந்தரமூர்த்திசுவாமிகளால் அருளிச் செய்யப்பட்டது. மாணிக்கவாசகசுவாமிகள் அருளிச்செய்த திருவாசகம் திருக்கோவையார் என்ற இரண்டும் எட்டாந்திருமுறையாகும்.

'ஆலயம் தொழுவது சாலவும் நன்று' என்றார் நமது ஒளவைப்பிராட்டியார். சிறு பிராயத்திலேயே

இதனை நாம் பள்ளியில் படித்திருக்கிறேம். ஆலயம் - ஆன்மாக்கள் லயமாதற்குச் சாதனமான இடம். கோயில் - இறைவன் தங்கியிருக்குமிடம். இறைவனுடைய அருட்டிருமேனிகளை எழுந்தருளுவித்து, மந்திர நியாசங்களால் சிவசத்தியைப் பதியச்செய்து, மூர்த்திமானுகிய சிவபரம்பொருளை நாம் வழிபடுகிறேம். கல்லினுலும் செம்பினுலும் செய்யப்பட்ட விக்கிரகங்கள், மந்திரம் நியாசம் முதலியன செய்த பின்னரே பூசை செய்தற்குத் தகுதியாகின்றன. ஆன்மாவிலும் பரமான்மாவை வைத்து விதிப்படி வழிபாடு செய்தல் வேண்டும். ஆன்மாவிலே பரமான்மாவை வைத்துத் தியானித்து வழிபாடு செய்தல் அகப்பூசையாம். புறத்திலே சிவலிங்கத்திருமேனி முதலிய வடிவங்களில் வைத்துப் பஞ்சசுத்தி செய்து வழிபடுதல் புறப்பூசையாம். இவை ஆன்மார்த்த பூசை எனப்படும். ஆன்மார்த்த பூசையானது வழிபடும் ஆன்மாவுக்கே பயன் தருவதாயுள்ளது. பிறருக்கும் பயன் தருவதாயுள்ள பூசையே பரார்த்தபூசை எனப்படும். கோயில்களில் செய்யும் பூசை பரார்த்தபூசையாகும். இப்பரார்த்தபூசையே வழிபாடு செய்கின்ற எல்லா ஆன்மாக்களுக்கும் பயன் தருவதாம். இம்மைப்பேறு மறுமைப்பேறு வீடுபேறுகளையெல்லாம் வழிபாடு செய்வோருக்கு அருளும் மேன்மையுடையது அது. ஆகலின், மக்கள் தனித்தாவது கூடியாவது சென்று வழிபாடுசெய்து உய்தற்கு உரியது திருக்கோயிலாகும்.

மக்கள் எங்கெங்கே தங்கி வசிக்கின்றுர்களோ அங்கங்கே அவர்கள் வழிபாட்டுக்கெனக் கோயில் இருத்தல் இன்றியமையாதது. 'கோயிலில்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்' எனப் பள்ளிச்சிறுராக நாம்

இருந்த பருவத்திலேயே அறிந்து வைத்திருக்கிறோம். திருநாவுக்கரசு சுவாமிகளும் "திருக்கோயில் இல்லாத திருவிலூரும்.........அவை யெல்லாம் ஊரல்ல அடவி காடே" என்று அருளிச்செய்தனர். திருஅங்கமாலை யில் நாவுக்கரசு சுவாமிகள் ஒவ்வொரு உறுப்புக்களும் இறைவன் விஷயமாகப் பயன்படுத்தப்படவேண்டும்; அப்படிப் பயன்படுத்துதற்காகவே இறைவன் நம்மை மானிடப் பிறவியில் பிறக்கச்செய்து நல்லுறுப்புகளைக் குறைபாடின்றித் தந்து உபகரித்திருக்கின்றார் என்று அருளிச்செய்கின்றார்கள். தலை, கண், செவி, மூக்கு, வாய், நெஞ்சு, கை முதலிய உறுப்புக்களின் பயன்களை யெல்லாம் கூறி,

"கால்களால் பயன் என் - கறைக்
கண்டன் உறைகோயில்
கோலக் கோபுரக் கோகர ணம்சூழாக்
கால்களால் பயன் என்?"

எனக் கால்களாற்பெறும் பயனையும் எடுத்துக்கூறி யருளினர். அவ்வாறே அவர்கள் தலயாத்திரையையும் மேற்கொண்டருளினார்கள். அவர்களுடன் சிவநேசச் செல்வர்கள் பலர் திரளாகச்சென்று வழிபட்டனர். தலயாத்திரை செய்வதால் சிவபுண்ணியம் விளைகிறது என்பதை எவரும் அறிந்திருக்கின்றனர்.

தலயாத்திரை மனிதனாகப்பிறந்த ஒவ்வொருவனும் செய்தே தீரவேண்டும். உயிர்யாத்திரையை நாம் ஒரு கணமேனும் சிந்திக்கவில்லை. உயிர் யாத்திரை தொடங் கியகாலம் எப்பொழுது என்பதை எத்தகையவரும் அறுதியிட்டுக் கூறமுடியாது.

"புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
வல்அசுர ராகி முனிவராய்த் தேவராய்ச்
செல்லாஅ நின்றஇத் தாவர சங்கமத்துள்
எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன் எம்பெருமான்"

என்று மாணிக்கவாசகசுவாமிகள், உயிர் செய்கின்ற யாத்திரையை ஒருவாறு குறித்தருளினர். உயிர்கட்கு உடம்பை ஒரு ஊர்தியென வைத்துக்கொள்வோம். "வினைப்போகமே யொருதேகங்கண்டாய் வினைதான் ஒழிந்தால், தினைப்போதும் நில்லாது" என்பர் பெரியோர். வினையினால் உடல் உண்டாம். அவ்வுடல் என்பத்துநான்கு நூறாயிரம் யோனிபேதம் என்பர்; எனினும், ஒவ்வொரு பேதத்திலும் எண்ணிறந்த உடல்கள் தோன்றுவனவாம். உயிர், உடம்பாகிய ஊர்தியில் ஏறி யாத்திரை தொடங்குகின்றது. உடம்புகளே பல வகைப்பட்ட வாகனங்கள். அவ்வாகனங்களில் ஏறிச் செல்லும் இடங்களும் பல. அவை இருநூற்றிருபத்து நான்கு புவனங்கள். பட்டினத்துப்பிள்ளையார் இந்த யாத்திரையைப்பற்றிச் சித்திரிக்கின்றனர். 'எத்தனையூர் எத்தனைவீடு எத்தனைதாய் பெற்றவர்கள்; எத்தனை பேரிட்டழைக்க ஏனென்றேன்' எனவும், 'அன்னை எத்தனை எத்தனை அன்னையோ அப்பன் எத்தனை எத்தனை அப்பனோ, பின்னை எத்தனை எத்தனை பெண்டிரோ பிள்ளை எத்தனை எத்தனை பிள்ளையோ' எனவும் கூறிக் காட்டினர். 'ஊரனந்தம், பெற்ற பேரனந்தம், சுற்றும் உறவனந்தம், வினையினால் உடலனந்தம், செய்யும் வினையனந்தம், கருத்தோவனந்தம், பெற்ற பேர் சீரனந்தம், சொர்க்க நரகமும் அனந்தம்' என

எல்லாவற்றையுமே தொகுத்துக் காட்டினர் நமது தாயுமானவசுவாமிகள்.

" அண்டசம் சுவேத சங்கள் உற்பிச்சம் சராயு சத்தோ(டு)
எண்தரு நாலெண் பத்து நான்குநூ றாயி ரத்தாய்
உண்டுபல் யோனியெல்லாம் ஒழித்துமா நுடத்துதித்தல்
கண்டிடிற் கடலைக் கையால் நீந்தினன் காரி யங்காண் "

என இதனை நமது சந்தானகுரவர்களுள் ஒருவராகிய ஸ்ரீ அருணந்திசிவாசாரிய சுவாமிகள் நன்கு தெளிவுறுத்தியருளினர். உயிர் உடம்போடு கூடிநின்று செய்யும் யாத்திரையை முற்றும் ஒழித்து, வீட்டிலே நிலைபெற்ற இன்பத்தை அடையவேண்டியே உடம்போடு கூடிய உயிர் சிவதலயாத்திரை செய்தலவசியம். யாத்திரைக்கு மனித உடம்பே சாலும்; மற்றவை சாலா. இதனைக் கருதியே 'மானுடப் பிறவிதானும் வகுத்தது மனவாக் காயம், ஆனிடத்தைந்தும் ஆடும் அரன்பணிக்காக அன்றோ' என்று அருளிப் பின்னரும் வலியுறுத்துவேண்டி, 'வானிடத்தவரும் மண்மேல் வந்து அரன்றனை அர்ச்சிப்பர், ஊனெடுத்து உழலும் ஊமர் உண்மையையுணரார் அந்தோ' என இரங்கியும் அருளினர். எனவே, நம் முன்னோரெல்லாம் சிவதல யாத்திரையைப் பெரும்பேறு எனக் கொண்டனர் என்னலாம். இறைவனே உயிர்களுக்குப் பக்குவம் வருமாறு செய்ய மூர்த்தி தலம் தீர்த்தமாக உருக்கொண்டு விளங்குகின்றார்.

" மூர்த்தி தலந் தீர்த்தம் முறையால் தொடங்கினற்கோர்
வார்த்தை சொலச் சற்குருவும் வாய்க்கும் பராபரமே "

எனப் பயனையும் தாயுமானவர் சுட்டிக்காட்டினர்.

உயிர் இறப்புப் பிறப்புக்களாகிய யாத்திரையி னின்று தப்பவேண்டுமாயின் தலயாத்திரை மேற்கொள் ளுதலைத் தப்பலாகாது. சீவன்முத்தராகிய சிவஞானி கள் யாவரும் குரு லிங்க சங்கம வழிபாடுகளை மேற் கொண்டொழுகி நமக்கெல்லாம் வழிகாட்டிகளாக விளங்கினர். குருவையும் சிவலிங்கமூர்த்தியையும் திரு வேடத்தையும் சிவனெனவே தேறி வழிபட்டனர். தனித்தனியாகவும் திரள்திரளாகவும் தலங்கள்தோறும் சென்று சென்று வழிபட்டனர். திருநாவுக்கரசுசுவாமி கள், திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள், சுந்தரமூர்த்தி சுவாமிகள் முதலியோர் செய்த தலயாத்திரையைச் சேக்கிழார்சுவாமிகள் நம் கண்முன்னே தோன்று மாறு திருத்தொண்டர்புராணத்தில் அருளிச்செய்தனர். நாயன்மார்கள் சிவதலத்தை அணுகியபோதும், திருக் கோயிலை அணுகியபோதும் எவ்வாறு நடந்துகொண் டார்கள் என்பதை நமக்கு உபதேசிக்கும் வாயிலாகக் கூறி அந்த வழியிலே நம்மைச் செவ்வே செலுத்து கின்றனர்.

திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள் தமது யாத் திரையை, 'தென்திசையிற் கயிலையெனும் திருக்கா ளத்தி'யுடன் முடித்துக்கொள்ளுகின்றார்கள். அதற்கு மேல் வடதிசையினும் மேற்றிசையினும் அருந்தமிழின் வழக்கு அங்கு நிகழாமையினால் சென்றிலர் எனச் சேக்கிழார்சுவாமிகள் காரணமும் காட்டியருளினர். அங்கிருந்தபடியே வடகயிலையினை வணங்கிப்பாடினர் சம்பந்தர்; திருக்கேதாரத்தையும் தொழுது பதிகம் அருளிச்செய்தனர்; திருக்கோகரணம், திருப்பருப்பதம், திரு இந்திரநீலப்பருப்பதம் முதலிய தலங்களையும் பாடிமகிழ்ந்தார். பின்பு காளத்தியப்பரைப் போற்றித்

திருவொற்றியூர் முதலிய தலதரிசனத்துக்கு அடியார் குழாத்துடன் அணைந்தருளினர் என்பர்

திருநாவுக்கரசுசுவாமிகள் தம் தலயாத்திரையைத் தொடங்கினர்; சோழநாடு, பாண்டிநாடு, நடுநாடு, தொண்டைநாடு முதலிய நாடுகளிலுள்ள பற்பல சிவ தலங்களை வழிபட்டனர்; பின்பு வடநாடும் சென் றனர். காளத்தி மலைக்கொழுந்தையும் வணங்கினர்; பின்பு திருப்பருப்பதம் போய்த்தரிசித்தார்; தெலுங்கு, கன்னடம், மாளவம், இலாடம் முதலிய நாடுகளையும் கடந்தார்; காசியை அடைந்தார்; பின்பு கயிலைமலையை நினைந்து அங்கு, சிவபெருமானை வணங்கிப் போற்ற வேண்டும் என முறுகியநிலையில் செல்வாராயினர். வழிகளின்நிலை சொல்லும் தரத்ததன்று. ஆயினும், மிகவருந்தி தம் உடலுறுப்புக்கள் தேய்ந்த நிலையிலுங் கூடக் கயிலைகாணும் விருப்பகன்றிலர். இறைவர், திருநாவுக்கரசரைப் பின்னும் தமிழ்நாட்டிலே சில காலம் இருந்து தொண்டாற்றி ஆன்மாக்களை உய்யக் கொள்ளவேண்டும் என்னும் திருவுளத்தால் ‘கயிலை மானுடர் நண்ணும் பான்மைத்தன்று; தேவரும் அணுகுதற்கு அரிது’ என்றருளினர்; பின்பு ‘இங்கே காணும் பொய்கையில்முழுகிக் கயிலையிலிருந்த அம் முறையே திருவையாற்றில்சென்று காண்பாய்’ என அசரீரியால் பணித்தருளினர்.

ஆன்மாவுக்கு ஆணவமல பரிபாகத்திலே தீவிரதர சத்திநிபாதம் உண்டாம். அப்போது சிவபெருமான் தமது திருவருளால் சிவஞானத்தை உதிப்பிப்பர். சிவா னந்தத்தை அநுபவிக்கச்செய்வர்; மேல் வரக்கடவ தாகிய பிறப்புக்கு ஏதுவாகிய சஞ்சிதவினை ஆகாமிய

வினைகளைக் கெடுப்பர்; எடுத்த உடம்பிலேயே பிராரத் தத்தைப் புசிக்கும்படிச் செய்வர்; சீவன்முத்தராக வைத்துத் தேகாந்தத்திலே பரமுத்தியைக் கொடுத்தருளுவர். இதனை, "சித்தாந்தத்தே சிவன்றன் திருக்கடைக் கண் சேர்த்தி" என்னும் சிவஞானசித்தித் திருவிருத் தத்தால் தெளியலாம். சத்தி நிபாதமாவது திரோதான சத்தி நீங்க அநுக்கிரகசத்தி பதிதலாம். இங்கே திரு நாவுக்கரசுசுவாமிகள் முதலியோர் தீவிரதர சத்திநிபாத முடையவர். சிவபெருமானது திருவருளினாலே மல விருள்நீங்கிச் சிவத்துவம் விளங்கப்பெற்றவர்; சிவா னந்தம் மேலிட்டுச் சீவன்முத்தராய் இருந்தார். இவர் சிவானந்த விளக்கமுடையவர் என்பது ஆனந்த அருவி பொழிதல், புளகமுண்டாதல், விம்மல், தழுதழுத்தல், பரவசமடைதல், இடையறுது ஞானப்பாடற்றெடை யறுதுபாடுதல் முதலியவற்றால் விளக்கமாம். நாவுக் கரசர் போன்றவர்கட்கு அகக்கருவி புறக்கருவிகளெல் லாம் சிவகரணமாய் நிகழப்பெற்றன. இவர்கள் நில வுலகத்திலுள்ள ஆன்மாக்களை ஈடேற்றும்பொருட்டே சஞ்சரிக்கும் இயல்புடையார். சிவஞானிகள் சரியை முதலிய தொண்டுகள் செய்யவேண்டுவதின்றே! சிவ தலங்கள்தோறும் சென்று சிவபெருமானைத் தரிசித்து வணங்கவேண்டுவதின்றே! என்பர் சிலர். சமயகுர வர்கள் பசுபோதம்நீங்கிச் சிவபோதமே மேலிட்டுத் தஞ்செயலற்றுச் சிவனேயாய் நின்றவர்கள் ஆகலின், எல்லாம் சிவச்செயலாகவே நிகழ்ந்தன. இதனை,

> "நஞ்செய லற்றிந்த நாமற்ற பின்நாதன்
> தன்செயல் தானேயென் றுந்தீபற
> தன்னையே தந்தானென் றுந்தீபற"

என்னும் திருவுந்தியாரான் உணர்க.

சிவஞானிகள் சரியை கிரியை முதலியவற்றைத் தாங்களாகவே வேண்டா என்று விடுவதும் இல்லை; செய்துவரல் வேண்டும் என்று சங்கற்பித்துச் செய்வதும் இல்லை; நித்திரை செய்வோர் கையிற் பொருள் அவரறியாது தானே போதல்போல, சிவஞானிகட்குச் சரியை கிரியை முதலியன எல்லாம் தாமே நீங்கும்.

திருநாவுக்கரசுசுவாமிகளும், திருஞானசம்பந்த மூர்த்தி சுவாமிகளும் அடியார்களுடன் யாத்திரை செய்தருளிய காலம் ஏழாம் நூற்ருண்டாகும். சமய குரவருள் மூன்ருமவராகிய சுந்தரமூர்த்தி சுவாமிகள் ஒன்பதாம் நூற்ருண்டிலே அடியார்கள் புடைசூழ யாத்திரை செய்தருளினர். சிவபெருமானுல் தடுத்தாட் கொள்ளப்பட்ட வன்ருெண்டர் சிவதல யாத்திரையில் நடுநாடு, தொண்டைநாடு, சோழநாடுகளில் உள்ள பல தலங்களையும் தரிசித்து வழிபாடாற்றினர். பின்பு திருக்காளத்தி முதலிய தலங்களைத் தரிசித்துக் காளத்தியிலிருந்தபடியே திருப்பருப்பதம், திருக்கேதாரம் முதலிய தலங்களுக்கும் திருப்பதிகம் பாடியருளினர். பின்பு சேரமான்பெருமான்நாயனுரோடு கூடிச் சோழ நாட்டுத் தலங்களைத் தரிசித்து, பாண்டிநாட்டிலுள்ள பிற தலங்களையும் வணங்கிக்கொண்டு, மதுரையை அடைந்து ஸ்ரீ மீனுட்சியம்மையாரையும் ஸ்ரீ சொக்கலிங்கமூர்த்தியையும் தரிசித்திருந்தனர்; அதன்பின் பல தலங்களையும் வணங்கி மீட்டும் திருவாரூரை அடைந்தனர். சேரர்பெருமானுடன் கொங்குநாடு மலைநாடுகளிலுள்ள தலங்களையும் தரிசித்தார்; பின் திருப்புக்கொளியூர் முதலிய தலங்களைத் தரிசித்து மலைநாட்டை நோக்கிச் சேரமான்பெருமாள்நாயனுர் எதிர்கொள்ளச் சென்றடைந்தார்; பின்னர், திருவஞ்சைக்களஞ்

சென்று சிவபெருமானைவணங்கி வெள்ளானையின்மேல் சிவாக்ஞையால் திருமலைக்கு எழுந்தருளினர்.

ஒவ்வொருகாலத்தும் அடியார்களும், ஆசாரியர் களும் சிவதல யாத்திரையை மேற்கொண்டு சிவ புண்ணியத்தை மேலும்மேலும் ஈட்டிச் சிவாநுபவம் வாயிலாகப் பிறமக்களையும் மெல்ல மெல்லப் பத்தி நெறியில் ஒழுகச்செய்து உய்யக்கொள்ளுதல் கண்கூடு.

இவ்வாறே இப்போது திருக்கயிலாயபரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனத்திலே ஸ்ரீ நமசிவாயமூர்த்தி களுக்குப் பின் இருபத்தொராவது குருமகாசந்நிதான மாக எழுந்தருளிவிளங்கும் ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணியதேசிக பரமாசாரியசுவாமிகளும் தலயாத்திரைகள் பல செய் தார்கள். இவ்வாதீனத்திலேயுள்ள குருமூர்த்திகள் பல ரும் தலயாத்திரை செய்திருக்கின்றனர். இவ்வாதீனத் திலும் பிற ஆதீனங்களிலும் அடியார் கூட்டத்திலே சேரவரும் தொண்டர்களுக்கு அவரவர் பக்குவநிலை நோக்கி முதன்முதல் யாத்திரைக் காஷாயம் கொடுத்து யாத்திரை செய்துவரக் கட்டளையிட்டருளுவார்கள் ஆசாரியர்களாயினர். தலயாத்திரைகளை முறையாக முடித்து வந்தபின் பக்குவம்பார்த்துப் பின்பே மந்திர காஷாயம் கொடுத்து அடியார்கூட்டத்திலே சேர்த் தருளுவர். இவ்வழக்கம் ஆதீனங்களில் தொன்று தொட்டு இன்றும் நடைபெற்றுவரும் சம்பிரதாயம்.

யாத்திரையிலே செல்லும் அடியார்களுக்குத் தல யாத்திரை செய்யும் புண்ணியம் சேர்வது ஒருபக்கம். நல்லோர் பலருடன் கலந்து பழகும் வாய்ப்பு அவர் களுக்கு இயல்பாக வளர்ந்துவரும். பிறரால் வினையும்

இன்பதுன்பங்களைச் சகிக்கும் சந்தர்ப்பமுண்டாகிறது. பிற உயிர்கட்குத் தம்மால் இயன்றவரை மனவாக்குக் காயங்களால் உபகாரம்செய்யும் நிலை உண்டாகிறது. தீயோர் கூட்டுறவால் அங்கங்கே விளையும் விளைவுகளை அநுபவத்திலே கண்டு ஒதுங்கும் நிலையும் ஏற்படும். தம்மோடு ஒத்தாரையும் மிக்காரையும் கண்டு தம்நிலைகளை உயர்த்தி நன்னெறியிலே செலுத்தவும் தெரிந்து கொள்ள வாய்ப்பு எளிதிலே கிட்டுகிறது. பசி, நோய் இவற்றால் அவதிப்படும் உயிர்களைத் தன்னுயிர்போலக் காண்பதற்குரிய சந்தர்ப்பம் இதைவிட வேறு கிடைத்தற்கில்லை. கருவிகரணங்கள் தம் சேட்டையொழிந்து அடங்கி ஒருநிலைப்படுதற்கு யாத்திரையும் ஒருசிறந்த சாதனமாம். கல்வியறிவொழுக்கமுடைய பல நல்லோருடன் உறவாடுதற்கு யாத்திரைகள் இன்றியமையாதன. மூர்த்திவிசேடம் தீர்த்தவிசேடம் முதலியவற்றை அறிந்து அநுபவிக்க இந்த யாத்திரைவாய்ப்பு மிகமிக நல்லது.

இவ்வாதீனத்து நான்காவது குருமூர்த்தியாகவுள்ள ஸ்ரீ உருத்திரகோடிதேசிகர் தம் ஆதீனத்து அடியார்களுடன் யாத்திரை செய்தருளினர். அந்தக் காலம் 1600 முதல் 1623 வரை என்பர். அதன்பின்பு வந்த ஞானாசாரியர்களிற் பலர் சிவதலயாத்திரையை நன்கு செய்தருளினர். தம்பிரான் சுவாமிகளில் பலர் சிவதல யாத்திரையாகச் சென்று அங்கங்கே தங்கியிருந்து செந்தமிழ் மொழியையும், சித்தாந்த சைவ நெறிகளையும் மக்களுக்குணர்த்தி நன்கு வளர்த்ததனால், மக்களிடையே நல்லொழுக்கமும் பத்தியும் வளர்ந்து வந்தன. இவ்வாதீனத்திலேயுள்ள ஞானாசாரியர்களும், முனிபுங்கவர்களும் சோழநாடு, பாண்டிநாடு, கொங்கு

நாடு, நடுநாடு, தொண்டை நாடுகளில்தான் யாத்திரை செய்திருந்தனர். சில ஆசாரியர்கள் தாம் பீடத்தில் எழுந்தருளுவதன் முன்பு யாத்திரையை முடித்துக் காசியில் சிலகாலம் தங்கியிருந்ததும் உண்டு.

பதினாறாவது குருமகாசந்நிதானம் ஸ்ரீ சுப்பிரமணிய தேசிகர் காலத்தில், சின்னப்பட்டத்திலிருந்த பேட்டை ஸ்ரீ நமசிவாயதேசிகர் காசியில் பன்னிரண்டு ஆண்டு கள் தங்கியிருந்து தமிழையும் சைவத்தையும் வளர்த் தனர். பதினேழாவது குருமகாசந்நிதானம் ஸ்ரீ அம்பல வாணதேசிகர் சோழநாட்டுத் தலங்களை எல்லாம் அடிக் கடி யாத்திரைசெய்து வழிபட்டார்கள். சோழநாட் டில் மூலை முடுக்குகளிலுள்ள எல்லாத் தலங்களையும் அவர்கள் நன்கு அறிந்து வைத்தவர்கள்.

இருபதாவது குருமகாசந்நிதானம் ஸ்ரீ அம்பலவாண தேசிகர் சோழநாடு, பாண்டிநாட்டுத் தலங்களை முறை யாக நன்கு யாத்திரையில் வழிபட்டவர்கள். இப்போ துள்ள குருமகாசந்நிதானம் முன்புள்ள சந்நிதானத்தில் யாத்திரை செய்தபொழுது நிழல்போல் தொடர்ந்து நன்கு யாத்திரைசெய்து அங்கங்கே சிவவழிபாடு செய்துவந்த சிவபுண்ணியம் மிக்கவர்கள். அந்தச் சிவ தலயாத்திரையால் வந்த சிவபுண்ணியவருவாயே பின் னும் பின்னும் தலயாத்திரை செய்யும் சிறப்பை நல்கி யது. "தவமும் தவமுடையார்க்கே யாம்" என்பது நம்முடைய சந்நிதானத்தின் விஷயத்திலே கைகண்ட அநுபவம்.

ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகாசந்நிதானம் ஞானபீடத்தில் இருந்து சைவச்செங்கோல் செலுத்தத் தொடங்கியதும்

1952 மார்ச்சு மாதத்தில் **திருவஞ்சைக்களத்திற்கு** யாத்திரை சென்றார்கள். அப்பொழுது உடனெழுந்தருளித் தரிசனம்செய்து வந்தவர்கள் திருத்தருமபுர ஆதீனத்தில் இப்போது இருபத்தைந்தாவது குருமகா சந்நிதானமாக வீற்றிருந்தருளும் ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரியசுவாமிகளாவார்கள். இரு மகாசந்நிதானங்களும் திருவஞ்சைக்கள யாத்திரை செய்துவந்த சிறப்புக்கு ஒப்பாகவோ உயர்வாகவோ ஒன்றையும் சொல்லமுடியாது. மலைநாட்டு மக்கள் இரு மகாசந்நிதானங்களையும் தரிசித்து இன்புற்றதிலை இகப்பரு மிகப்பெரு வியப்பாகவே இருந்தது. அத்தல யாத்திரையில் திருவஞ்சைக்களம் தேவாரத் திருப்பதிகம் அச்சிட்டு வழங்கப்பட்டது.

1952 நவம்பர் மாதத்தில் பம்பாய் இராசதானியில் வடகன்னடம் ஜில்லாவில் உள்ள **திருக்கோகரணம்** என்னும் தலயாத்திரைக்கு எழுந்தருளினார்கள். அப்பொழுதும் ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானம் கட்டளையிட்டருளியபடி திருக்கோகரணம் தேவாரத்திருப்பதிகங்கள் பொழிப்புரையுடன் அச்சிட்டு வழங்கப்பெற்றன. இத்தலத் தேவாரத்திருப்பதிகத்தை ஆங்கில மொழியிலும் கன்னட மொழியிலும் அச்சிட்டு வழங்கியருளினார்கள். 1953 ஜனவரி மாதத்தில் **ஸ்ரீசைலம்** (திருப்பருப்பதம்) யாத்திரைக்கு ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானம் எழுந்தருளினார்கள். அப்போதும் அத்தலத் தேவாரத் திருப்பதிகம் பொழிப்புரையுடன் அச்சிட்டு வழங்கப்பெற்றது. பின்பு தொடர்ச்சியாக ஆண்டுகள்தோறும் அடியார் கூட்டங்களுடன் ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானத்தில் காசி யாத்திரையும் செய்து வருவது மிக மிக எளிதாயிற்று.




'சிம்பான்ஜங்க்' மலையுச்சியில் ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள்
(கடல் மட்டம் உயரம் 8162 அடி)

# நேபாளம்

ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் 1958-ம் ஆண்டு மேமாதத்தில் நேபாளயாத்திரைக்கு எழுந்தருளத் திருவுளம்பற்றினார்கள். நேபாளம், பூதானம் என்னும் இரண்டு தேசங்கள் இமயமலையின் அடிவாரத்தில் உள்ளன. நேவா+பாலம் என்ற இரு சொற்கள் நேபாலம்-நேபாளம் என்று ஆயிற்று என்பர். நேவா என்ற முனிவரால் ஆக்கப்பட்ட அமைப்புமுறை என்று அந்தச் சொற்குப் பொருள் கூறுவர்.

நேபாளதேசம் தெய்வீகமுள்ள ஒரு புனித இடம் என்று நம்மனோர் கருதுகின்றனர். நேபாளநாட்டில் பாசுபதக்கொள்கையே உள்ளது. நம் தமிழ்நாட்டிலே தான் சித்தாந்த சைவக்கொள்கை நிலைபெற்றது. பாசுபதம், மாவிரதம், காபாலிகம் என்னும் இந்த மூன்றும் அதிமார்க்க நூல்களாம். இவை உருத்திரர்களாற் செய்யப்பட்டன. பாசுபதம் சங்கிராந்த சமவாதம் என்றும், மாவிரதம் உற்பத்தி சமவாதம் என்றும், காபாலிகம் ஆவேச சமவாதம் என்றும் கூறுவர். பாசுபதர் ஆணவமலத்துண்மைகொள்ளார்; மாவிரதர் ஆணவமலத்துண்மை கொள்ளுவர்.

பாசுபதநூலில்: ஆன்மாக்கள் பலவாய், நித்தமாய், வியாபகமாய், காரியகாரண சையோகத்தால் தோன்றும் ஞானத்தால் தனித்தனி வேறுபாடுடையனவாய் இருக்கும் என்றும், இவ்வான்மாக்கட்கு ஆணவம் இல்லை என்றும், மாயை கன்மங்கள் என்று இரண்டு பாசங்கள் உண்டு என்றும், பாசங்களால்

சுகதுக்கங்களை அநுபவிக்கும் என்றும், வைராக்கிய முண்டாய்ச் சாத்திரத்தில் கூறியபடி தீக்கைபெற்று ஆன்மாவினிடத்துப் பரமேசுரனுடைய ஞானம் முத லிய குணங்கள் சங்கிராந்தமாய்ப் பற்றும் என்றும், அப்போது குடும்பபாரத்தைப் புத்திரரிடத்து வைத்து விட்டுத் துறவறத்திற் செல்லுவார்போல ஈசுரனும் தன்னுடைய ஞானம் முத்தனிடத்துச் சங்கிரமிக்கச் செய்து, தன் அதிகாரத்து ஒழிவுபெற்றிருப்பன் என்றும் கூறப்படும்.

இறைவன் படைப்பில் எத்தனையோ விசித்திரம். அவை இறைவனுடைய சர்வ வல்லமையினை வெளிப் படுத்திச் சிந்திக்கச் செய்கின்றன. எல்லாம் வல்ல இறைவனால்தான் இத்தனை விசித்திரமாக எவற்றையும் படைக்கமுடியும். சின்னாள்வாழ் பல்பிணிச் சிற்றறி வினர், எதனையும் தம்மால் இயற்றமுடியும் என ஆண வத்தால் இறுமாந்து அவதியுறுவதை நாம் அநவரத மும் கண்கூடாகக் காண்கின்றோம். கண்டுவைத்தும் என்? நாம் திருந்துவதுதான் இல்லை. எல்லாம் வினைப் பயன். முன்னே நாம்செய்த நல்வினை தீவினைகளுக்கு ஈடாகவே நமக்கு உடம்பு கிடைக்கிறது. அந்தக்கர ணங்களும் அமைகின்றன. நாம் வசிக்கின்ற இடங் களும் நம் அநுபவப் பொருள்களும் அவ்வினைப்பய னாகவே உளவாகின்றன. வடக்கே இமயமலை, தெற்கே கன்னியாகுமரி. 'குமரிமுதல் இமயம்வரை' என்ற ஒரு பழமொழியும் உண்டு. இமயமலையை மலைகளுக்கெல் லாம் அரசன் என்பர். இமயமலை, கிழக்கு மேற்காக ஓர் அளவுகோலைப்போல இருக்கின்றது என்பர் காளிதாச மகாகவி. உமாதேவியார் ஒருகாலத்து மலை யரையன் புதல்வியாக அவதரித்தார். சிவபெருமான்



கோயிலின் புறத்தோற்றம்

அவரைத் திருமணம் செய்துகொண்டார்; உமாதேவி யாரோடு என்றும் நீங்காமல் திருக்கயிலாயமலையில் விற்றிருந்தருளுகின்றார்.

இமயமலை பனிமலை என்றும் கூறப்படும். இமய மலைச் சிகரங்களில் பனிமேகங்கள் பரவிப் படர்ந்து காணப்படும். பனிமேகம் படிந்து காணப்படுவதால் மிக வெண்ணிறத்தோடு கூடிய காட்சி புண்ணியந் திரண்டு ஓர் வடிவெடுத்தாற்போல விளங்கும். புண் ணியம் வெண்மைநிறம், பாவம் கருமைநிறம் எனக் கூறுவர் கவிஞர். எங்கெங்கும் பனிமேகங்கள்; எங் கெங்கும் அருவிகள்; எங்கெங்கும் ஓங்கியுயர்ந்த காடு கள்; எங்கெங்கும் மிகக்குளிர்ந்த சுனைகள்; இப்படி யெல்லாம் இயற்கைக் காட்சிகளைக்கண்டு மகிழ்வடை யலாம். இப்படிப்பட்ட மலைகளே - மலை அடிவாரங் களே மக்கள் மனச்சாந்தி அடைவதற்குத் தக்க இடங் கள். நாம் அவ்விடத்துச் சிறிதுநேரம் நின்றால்கூட நம் மனம் அமைதியுறும். அவதியுற்று, அல்லலுற்று எப்பொழுதும் சாந்தமென்பதைக் கேட்டறியாதாரும் அவ்விடத்தை அடைந்தால் அமைதியின் உருவை அழுந்தி அறிவார்கள். காமக்குரோதாதிகளும் கணப் பொழுதும் நில்லா. கரடி, புலி, யானை, பன்றி, சிங்கம் முதலிய கொடிய விலங்குகள் அங்கே உள்ளன; ஆயி னும், மக்கள் உடம்போடு கூடிநின்று துன்புறுத்தும் இவ்விலங்குகள்போல்வன ஆகா அவை.

நேபாளம் நமது தேசத்தின் வடகிழக்கில் உள்ள ஒரு தனி இராச்சியம். அது மலைநாடு; பல நூற்றுக் கணக்கான அடுக்கு மலைகளையுடையது; மிக அழகா னது; பல நீர்வீழ்ச்சிகளை உடையது; பயங்கரமான

மலைச்சரிவுகளால் விளங்குவது. அங்குள்ள பாறைகள் சந்தனக் கற்பாறைகளாகவும், பலநிறங்களையுடையன வாகவும் காணப்படுவன. புத்தர்தோன்றிய நகரமும் அப்பகுதியிலேயே உள்ளது.

**நேபாளம் செல்லும் புகைவண்டிவழி:** காசி கண்டோண்மெண்ட்' புகைவண்டி நிலையத்திலிருந்து 'முஸபல்பூர்' என்னும் சந்திப்பு; அங்கே வண்டிமாறி 'ஸுகோலி' என்னும் நிலையம்; மறுபடியும் வண்டி மாறி ஏறினால் 'ரக்ஸோல்' என்னும் நிலையம். அங்கே வண்டிமாறி 'பிரம்மகஞ்ச்'வரை செல்லலாம். பிரம்மகஞ்சிலிருந்தே நேபாள ரெயில்வே தொடங்கு கின்றது. அந்த ரெயில்வே 'அமலேஷ்கஞ்ச்' வரையில் செல்லும்.

நேபாளம்ரெயில் ஒரு விசித்திரகரமானது. வண்டி களுக்குக் கதவுகள் இல்லை; விளக்குகளும் இல்லை. வண்டிகள் எவ்விடத்திலும் நிற்கும்; எக்காலத்திலும் புறப்படும். இவ்வண்டிகளில் வடநாட்டினரே மிகுதி யும் ஏறுவர். ஆண் பெண் என்ற வேறுபாடின்றி வண்டியில் இருபாலாரும் கலந்திருப்பர். நாகரிகமற்ற வர்கள். வண்டியில் இருபாலாரும் ஹுக்கா, பீடி, சிகரெட் பிடிப்பார்கள். மிக முரடர்கள். ஜன்னல்கள் வழியாகவே யாவரும் ஏறுவர். பயணச்சீட்டும் வாங்க மாட்டார். 'அமலேஷ்கஞ்ச்' என்னும் இடத்திலிருந்து பேருந்திகள் புறப்பட்டு 27 மைல் தூரம் வரைதான் செல்லுகின்றன. அதன்பின் நடந்தே செல்லவேண்டும். சொந்த ஊர்தியிலே செல்லக்கூடிய யாத்திரீகர்கள் நேபாளம்வரையிலே உந்தூர்தியிலேயே செல்லலாம். பேருந்திகள் போய் நிற்கும்படியான இடம் மலையின்

அடிவாரமே. அங்கே தர்மசாலை உண்டு. கூலிகளை ஏற்படுத்திக்கொள்ளும் காரியாலயமும் அவ்விடத்தில் உள்ளது. ஒரு கூலியாள் ஏறக்குறைய இருமணங்கு எடையுள்ள சாமான்களைத் தூக்கிச் செல்லுவான். கூலியாட்களின் உதவியின்றித் தனித்துச்செல்ல நம்மவர்களால் இயலாது. கூலியாட்கள் தலையில் குல்லாய், கடினமான மேற்சட்டை, காற்சட்டை, பெல்ட், அதில் வளைந்த பெரிய கத்தி, ஒரு பெரிய போர்வை இவைகளை உடையவர்கள். கூலியாட்கள் நம்மைத் தொடர்ந்தே சாமான்களைச் சுமந்துசெல்வார்கள்.

மலை அடிவாரத்திலிருந்து புறப்பட்டு 'பிம்கடி' 'சீசாகடி' என்னுமிடத்தை அடையவேண்டும். அவ்விடத்தில் நாம் கொண்டுபோகும் சாமான்களைப் பரிசோதிப்பார்கள். கடல் மட்டத்திலிருந்து 'சீசாகடி' 8,650 அடி உயரமானது. வழி நேரே செங்குத்தான ஏற்றமுடையது. 'சீசாகடி' என்னுமிடத்தில் தங்கிச் செல்ல விடுதிகள் உண்டு. சீசாகடியிலிருந்து 'சந்திரகடி'க்குச் செல்லவேண்டும். அதன் உயரம் 7,400 அடி என்பர். சந்திரகடியிலிருந்து 'தான்கோட்' என்ற இடத்துக்குச் செல்லவேண்டும். அங்கு யாத்திரீகர்கள் கையெழுத்துச் செய்யவேண்டும். யாத்திரீகர்களுக்கு நான்கு பூரியும், அதற்கேற்ற காய்கறிகளும், ஹல்வாவும் கொடுக்கப்படுகின்றன. இது நேபாள மகாராஜாவின் தர்மம். இவ்வுணவு நேபாளம் போகின்றவர்களுக்கும், அங்கிருந்து திரும்பி வருபவர்களுக்கும் அளிக்கப்படுகிறது.

'தான்கோட்டி'லிருந்து நேபாளம் செல்லுதற்குப் பேருந்திகள் உண்டு. அதில் ஏறி 'காட்மாண்ட்' என்ற

இடத்துக்குச் செல்லவேண்டும். அது நேபாள தேசத்தின் தலைநகரம். காட்மாண்ட் (காஷ்டம் - மரம், மாண்ட் - மண்டபம்) என்றால் மரத்தால் ஆகிய மண்டபம் அல்லது வீடுகள் என்று பொருள்படும். காட்மாண்ட் என்னும் இடத்தைக் கடந்தே ஸ்ரீ பசுபதிநாதர் ஆலயத்துக்குச் செல்லுதல் வேண்டும்.

12—5—58ல் திருவாவடுதுறையாகிய சிவராசதானியிலிருந்து எங்கள் துறவரசர் நேபாளதேசம் செல்ல எழுந்தருளினார்கள். 5—6—58-ல் நேபாளத்திலே உள்ள ஸ்ரீ பசுபதிநாதரைத் தரிசிக்கும் வாய்ப்புக் கிடைத்தது. இடையிடையே உள்ள சிவதலங்களைத் தரிசித்தும், தீர்த்தங்களில் நீராடியும் செல்வதற்கு ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானத்தில் எழுந்தருளும் உந்தூர்தியும், உடன்சென்ற ஏனைய உந்தூர்திகளும் பயனுடையனவாயின.

ஸ்ரீ பசுபதிநாதர் சோதி இலிங்கங்களுள் ஒன்று. 1. சோமநாதம், 2. மல்லிகார்ச்சுனம், 3. மகாகாளம், 4. ஓங்காரேச்சுரம், 5. பீம்சங்கரம், 6. திரியம்பகம், 7. நாகேசம், 8. குஷ்மேசம், 9. கேதார்நாதம், 10. காசி விசுவநாதம், 11. வைத்தியநாதம் என்பன மற்ற இலிங்கங்கள். இராமநாதமும் சோதிலிங்கமேயாம்.

ஸ்ரீ பசுபதீசுவரர் ஆலயத்திலே மகாசிவராத்திரி காலம் மிக விசேஷமாக நடைபெறும். பசுபதீசுவரர் கோயிலின் எதிரில் 'பாகுமதி' என்னும் 'வாங்மதி' நதி ஓடுகிறது. திருக்கோயிலின் நான்கு பக்கங்களிலும் வெள்ளிக்கதவுகள் அமைக்கப்பட்டுள. அங்கேயுள்ள சிவலிங்கமூர்த்தி ஐந்து திருமுகங்களோடு விளங்குபவர்.



பரிவார சிவலிங்கங்கள்

கோயிலின் அமைப்பு பெரும்பாலும் வடநாட்டுக் கோயிலைப் போன்றதே; எனினும், புதுமாதிரியான காட்சியையும் காட்டிநிற்கும். கோயிலின் முக்கியமான திருவாயில் மேற்கு நோக்கியதே. சந்நிதியில் மிகப் பெரிய நந்தியும், துவசத்தம்பமும் இருக்கின்றன. தெற்குத் தலைவாயிலிலுள்ள ஒரு கைப்பிடிச்சுவரிலே ஆயிரத்தெட்டுச் சிவலிங்கமூர்த்திகளைப் பலவிதமாக அமைத்திருக்கின்றனர். ஸ்ரீ பசுபதிநாதருடைய ஐந்து திருமுகங்களிலும் ஐந்து அருச்சனைகளும், அபிஷேக ஆராதனைகளும் நடைபெறக்காணலாம். சிவபிரானுக்கு நிவேதிக்கப்படுகின்ற நிவேதனப்பொருள்களெல்லாம் தென்னாட்டினர் செய்யும் பக்குவமுறையிலே செய்யப் படுகின்றன. அவ்விடத்திலுள்ள ஏனைய கோயில் களுக்கு இரண்டு மூன்று மைல் தூரம் சென்றே நடந்து வரவேண்டும். கோயில் அருச்சகர்கள் பசுபதீசுவரர் கோயிலின் ஒருபுறத்திலே வசிக்கின்றனர். அவர்கள் யாத்திரீகர்களை வரவேற்று முகமலர்ச்சியுடன் செய்யும் உபசாரம் குறிப்பிடத்தக்கதாம். தென்னிந்தியவாசிகள் பலர் அங்கே இருக்கின்றனர். சந்நியாசிகள் அந்த இடத்திலே மிகுதியாக உள்ளனர்; பெரிதும் மதிக் கப்படுகின்றனர். நேபாள மகாராஜாவின் உத்தரவுப் படி அவர்களுக்கு உணவு, பயணச்செலவு முதலியன கொடுக்கப்படுகின்றன.

காட்மாண்ட்: இது இமயமலைச்சாரலில் பலமலை களுக்கு இடையில் உள்ள பெரிய நகரம். இந்நகரம் இயற்கையில் நல்ல மலையரணோடுகூடி விளங்குவது. தரைமார்க்கமாக வரும் பகைவர் படைக்குச் சிறிதும் அஞ்சவேண்டுவதில்லை. மிக்க குளிர்பொருந்திய இடம். அங்குள்ளோர் நல்ல உழைப்பாளிகள்; குதிரையில்

ஏறிச் சவாரிசெய்தலிலும் வல்லவர்கள். யாத்திரிகர்கள் பார்க்கத்தக்க பல இடங்கள் உள. அவை – மணிக் கூண்டு, அதனையடுத்துள்ள கலாசாலை, கல்விக்காரி யாலயம், குதிரைப்பந்தயத்துக்குரிய பெரிய மைதானம் என்பன. 'திருச்சந்திரா' என்பது அக்கலாசாலையின் பெயர். 'பத்மா கனக வித்தியாலயம்' என்பது பெண்களுக்குரியது. அதன் எதிரிலுள்ள தெப்பக்குளம் 'ராணி போதி டாங்க்' என்பது மிகவும் பெரியது. 'தார்வார்' என்னும் உயர்நிலைப்பள்ளியில் எழுநூறு மாணவர்களுக்குமேல் பயில்கின்றனர். இதுதான் மிகப் பழைய உயர்நிலைப்பள்ளி. இக்கட்டிடம் ஒன்றே பள்ளியின் பழமையைக் காட்டும். 'மாண்டிசோரி' பள்ளியானது சிலகாலத்திற்குமுன் திறக்கப்பட்டதாம்.

அரண்மனையின் அழகைக்கண்ட கண்கள் பிறி தொன்றிலே பெயர்ந்துசெல்லா; எத்தனைமுறை பார்த் தாலும் புதிதாகப் பார்ப்பதுபோலவே வியப்பை உண் டாக்கும். அரசருடைய கொலுமண்டபம், நந்தன வனம் இவைகளின் அழகு காணத்தக்கதே. அமைச் சர்கள் உறைவிடங்களும் அரண்மனையோ என ஐயுறத் தக்கன. காட்மாண்டில் பல திபேத்திய ஆண்களும் பெண்களும் இருக்கின்றார்கள்.

பார்வதிதேவியார் தவஞ்செய்த இடம் பாகுமதிக் கரையிலே உள்ளது. பசுபதீசுவரர் கோயிலிலிருந்து கிராதகேசுவரர் கோயிலுக்குச் செல்லலாம். 'குஜகாளி' கோயில் அங்கே பிரசித்தம். பீடம்போன்றே அதன் அமைப்பு உள்ளது. பீடத்தின் மத்தியில் ஒரு பிலத் துவாரமுண்டு. அது மூடப்பட்டிருக்கும். காணிக்கை செலுத்தினால் அதில் உள்ள தீர்த்தத்தை எடுத்து

நம்மீது தெளிப்பார்கள். தத்தாத்ரேயர்கோயில் ஒன்பது மைல் தொலைவில் இருக்கிறது. அவதூத ஆசிரமத்துக்கு அவரே முதல்வர் என்பர். இப்போதுள்ள தலைநகரம் காட்மாண்ட்: முன்பு 'பக்தபூர்' என்பது தலைநகரமாயிருந்ததென்பர். காட்மாண்டில் ஒரு விலங்குக் காட்சிச் சாலையும், மலையின்மேல் சாரதா கோயிலும் உள்ளன. சாரதா கோயிலுக்கு மலையின்மேல்செல்ல ஒருவழியும், கீழிறங்கிவர வேறொரு வழியுமாக இருக்கிறது. இறக்கத்திலிருந்து ஒன்பது மைல் தூரத்தில் 'நீலகண்டர்' கோயில் உள்ளது. எனினும், செல்லும் வழி மிகவும் மோசமானது. ஆனால், தனித்த இடம்.

சிவபத்திநிறைந்த நேபாள அரசர் ஆளுகையில் உள்ள ஸ்ரீ பசுபதீசுவரர் ஆலயம் நித்திய நைமித்திக பூசையால் சிறப்புற்று விளங்குதல் கண்கூடு. மக்கள் உடம்பு எடுத்த ஆஸ்திகர்கள் அனைவரும் ஸ்ரீ பசுபதி நாதரைத் தரிசித்து எண்ணிய எண்ணியாங்கே பெற்று உய்யக்கடவாராக.

உ

கந்தமாதனம் கயிலைமலை கேதாரம்
காளத்தி கழுக்குன்றம் கண்ணார்அண்ணா
மந்தமாம்பொழிற் சாரல்வட பர்ப்பதம்
மகேந்திர மாமலைநீலம் ஏமகூடம்
விந்தமாமலை வேதம்சையம் மிக்க
வியன்பொதியின் மலைமேரு உதயமத்தம்
இந்துசேகரன் உறையும் மலைகள் மற்றும்
ஏத்துவோம் இடர்கெட நின்றேத்துவோமே.

— திருநாவுக்கரசு சுவாமிகள்.

# கேதாரம்

ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் திருவாவடுதுறையிலிருந்து உந்தூர்தி (Car) மூலமாகவே பல தலயாத்திரைகளைச் செய்தருளுகின்றார்கள். பலமுறை செய்த காசி யாத்திரைகளிலும் அப்படியேதான். புகை வண்டிகளின் மூலமாகவும் உந்தூர்தி வானூர்திகளின் மூலமாகவும் காசி கேதாரம் முதலிய தலங்களுக்குச் செல்ல வசதிகள் இந்தக்காலத்து மிகுதியாகவுள்ளன. எனினும், உந்தூர்திமூலம் செல்லும் தலயாத்திரையில் பெரிதும் நன்மைகள்: அடுத்தடுத்துள்ள தீர்த்தங்களில் ஆடுதற்கும், மூர்த்திகளைத் தரிசிப்பதற்கும், தலங்களைத் தரிசிப்பதற்கும் தங்கித்தங்கிச் செல்வதற்கும் வாய்ப்பு உண்டு. இளைப்பாறுதலுக்கும் வழியுண்டு. உந்தூர்திகள் ஊர்களினுள் நுழைந்து செல்வதால் ஊரின் அமைப்பு, ஊர்களிலுள்ள மக்களது நடைமுறை, வழக்க ஒழுக்க முதலியவைகளை ஒருவாறு உணர்ந்து கொள்ளலாம். மேலும், செல்லும் பாதைகளில் உள்ள ஏற்ற இழிவுகள், பக்கங்களிலுள்ள உயர்ந்த மலைகள், மலைப்பக்கங்கள், தாழ்ந்த மிக ஆழமான பகுதிகள், காடுகள், வெட்டவெளிப் பிரதேசங்கள் முதலிய இயற்கைக்காட்சிகளையும் யாத்திரை செல்கின்றவர்கள் நன்கு அநுபவிக்க இயலும்.

நாம் உந்தூர்தியில் ஏறிக் குறிக்கோள் ஒன்றை வைத்துக்கொண்டே வழிச்செல்கிறோம். நம்முடைய வழிச்செலவில் எத்தனையோ இன்பங்களும் துன்பங்களும் உளவாகின்றன. நம்முடன் ஒத்த மனமுடையாரும் பிணக்கிலாதாரும் ஆகிய மக்களே துணையாக

வருவர். துணையாக வருபவர் யாவரும் நமக்கு (உயிருக்கு) அகக்கருவி புறக்கருவிபோல்வார்கள். ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானத்துடன் தொடங்கும் யாத்திரையிலே உயிர்க்குயிராக விளங்கும் சிவபரம்பொருள் குருவடிவிலேயிருந்து நம்மைச் செலுத்துவதாம் என்க. நம் குருபரராகிய ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானம், ஆன்மாக்களாகிய நமக்கெல்லாம் உறுதுணையாயிருந்து நடத்தும் சிவபெருமானே எனச் சத்தியமாய் உளங்கொள்ளுதல் வேண்டும். அஃதொன்றே நம்மையெல்லாம் என்றும் ஈடேற்றும் என்னலாம்.

நமது வாழ்க்கையிலே எத்தனையோ கோணல் மாணல்கள், எத்தனையோ வளைவுகள், எத்தனையோ ஏற்ற இழிவுகள், எத்தனையோ கஷ்ட நஷ்டங்கள்; இவைகளை எல்லாம் பொருட்படுத்தாமல் வாழ்வையே குறிக்கோளாக வைத்து நடத்துகிறோம். நம் யாத்திரையிலே செல்லும் வழியில் ஏற்ற இழிவுகள் எத்தனையோ? அத்தனையையும் தாண்டித்தான் நம் யாத்திரையாகிய குறிக்கோள் நடைபெறவேண்டும். இதற்கெல்லாம் நாம் அஞ்சலாகாது. அஞ்சத்தக்கவைகளுக்கே அஞ்சுதல் வேண்டும்.

" அஞ்சுவ தஞ்சாமை பேதைமை அஞ்சுவ(து)
அஞ்சல் அறிவார் தொழில் "

என்பது திருக்குறள்.

பாவமும் பழியும் கேடும் முதலாக அஞ்சப்படுவன பல. அஞ்சாமை, எண்ணாது செய்துநிற்றல். அஞ்சுதல் எண்ணித்தவிர்தல். மாணிக்கவாசகசுவாமிகள் தாம் அருளிச்செய்த திருவாசகம் அச்சப்பத்தில் அஞ்சத்

தக்கவர் யாவரென விளக்கமாக அருளியுள்ளமை நாமெல்லாம் அறிந்து போற்றத்தக்கன. "வெண்ணீறு அணிகிலாதவரைக் கண்டால் அம்மநாம் அஞ்சுமாறே" "கொன்றைமாலை முன்னவன் பாதம் ஏத்தி, அகம் நெகாதவரைக் கண்டால் அம்மநாம் அஞ்சுமாறே" "அறிவிலாதவரைக்கண்டால் அம்மநாம் அஞ்சுமாறே" என்பன அவற்றுட் சிலவாம். நால்வகை நெறியினும் படிமுறையானே பயின்றொழுகி, நற்செவ்வி பெற்று, பேரின்பம் பெறுதற்கண் முயலாதவர்களைக் கண்டு அஞ்சுதலே நாம் செய்யற்பாலது எனச் சுவாமிகள் அருளுவார்கள்.

> "முகத்தின் இனிய நகாஅ அகத்தின்னா
> வஞ்சரை அஞ்சப் படும்"

என்றருளினர் திருவள்ளுவநாயனார். கண்டபோது முகத்தால் இனியவாகச் சிரித்து எப்பொழுதும் மனத்தால் இன்னாராய வஞ்சரை அஞ்சல்வேண்டும் என உலகியல்பற்றி அஞ்சத்தக்காரையும் இதில் குறிப்பிட்டமை காணலாம்.

வடநாட்டவர் தம் நாட்டு மக்களிடையே ஒற்றுமையுடையவர். கடவுள் வழிபாட்டிலே உணர்ச்சி மிக்கவர்கள். அவர் வழிபாடு பக்திவழிபாடு. அவர்கள் உணர்ச்சியுடன் பஜனை செய்வார்கள்; ஆடுவார்கள்; பாடுவார்கள். பெரும்பாலும் குளிர்காலத்திலே யாவரும் கம்பள ஆடைகளையே அணிந்துகொள்வார்கள்.

யாத்திரை செல்வோர் அறிந்துகொள்ளவேண்டிய செய்திகள் பல. நாட்டின் நிலை, மக்களின் பழக்க வழக்கங்கள் என்பன அவற்றுள் முக்கியமானவை.

உணவுகள், தங்க வசதிகள், காட்டிலே செல்வோர் தெரிந்துகொள்ள வேண்டியன, மலைமேலேறுவோர் கவனிக்கவேண்டுவன முதலியவையும் இன்றியமை யாதனவே. எல்லாவற்றிலும் மிக இன்றியமையாதது செல்லும் வழி. செல்லும் வழி இன்னதென்பதை அறிந்துகொள்வோமாயின் அதற்கியைய நம்மையும் சரிப்படுத்திக்கொள்ளுவோம். மேலே கூறியவற்று ளெல்லாம் முக்கியமாக நமக்கு வேண்டியது அநுபவம் வாய்ந்த நல்லதுணை. "குருடும் குருடும் குருட்டாட்ட மாடிக், குருடும் குருடும் குழிவிழுமாறு" இல்லாமல் பார்த்துக்கொள்ளுதல் வேண்டும். "ஏமாந்த சோண கிரி"யாகவும் நாம் ஆகிவிடுதல் கூடாது. ஏமாற்றும் சோணகிரிகள் இந்த நாளிலே எங்கும் பல்கி மல்கி விட்டனர் என்பதை ஒவ்வொருநொடிப்பொழுதிலும் கவனத்திற்குக்கொண்டுவந்து விழிப்புடன் இருத்தல் வேண்டும். 'எல்லாம் சிவச்செயல்' எனினும், சீவச் செயலும் உண்டல்லவா? சீவச்செயலெல்லாம் சிவச் செயலென வாளா கூறலாமா? "எல்லாஞ் சிவன்செய லென்று அறிந்தால் அவன் இன்னருளே, அல்லால் புகலிடம் வேறுமுண்டோ?" என்று சொன்ன சிவ ஞானிகள்நிலை நம் நிலையாகுமா? உலகநிலையிலிருந்து உழல்வோர்களுக்கு அவர்களுக்குரிய சகா; ஞானநிலை யில் நின்று சஞ்சரிப்போருக்கு அவர்களுக்குத் தக்க சகாக்களும் உளர்.

இனி, கேதாரம் செல்லும் வழியிலே மனத்தைச் செல்லவிடுவோம். ஒருவர் சென்னையிலிருந்து புறப் படுவதாக வைத்துக்கொண்டால் அவர் புகைவண்டி வழியாகச் செல்லலாம்; வானூர்தி வழியாகவும் செல்ல லாம். புகைவண்டி வழியைக் கைக்கொள்ளுவோர்

கல்கத்தா வழியாகக் காசியை அடைந்து பின்னர் 'ஹரத்துவாரம்' வழியே செல்லலாம். நேரே டெல்லி சென்று ஹரத்துவாரத்தை அடைந்து செல்லுதற்கும் வழியுண்டு. பம்பாய் வழியாகவும் ஹரத்துவாரத்தைச் சென்று சேரலாம். இதுவே பிரதட்சிணமாகச் செல்லும் வழி. எனவே, புகைவண்டி மூலமாக ஹரத்துவாரத்தையடைய மூன்று வழிகள் உள்ளன. எப்படிச் சென்றாலும் ஹரத்துவாரத்தை அடைந்தே மேற் செல்லுதல்வேண்டும்.

**ஹரத்துவாரம்** : இதனை ஹரித்துவாரம் என்பர் வைணவர். இது புண்ணியத்தலம். சிவபெருமான் சடையிலிருந்து கங்கை வருவதால் ஹரத்துவாரம் என்பர் சைவர். துவாரம் - வழி. இங்குதான் கங்கை மலையினின்று பூமியைத்தொடுவது என்பர். விஷ்ணு பாதத்திலிருந்து கங்கை வருவதெனக்கூறி, வைணவர் விஷ்ணு பாதத்தை அங்கே கங்கைக்கரையில் வைத்திருக்கின்றனர். உலகெலாம் உருவமாயினனுக்கு எந்த இடம் சிரம்? எந்த இடம் பாதம்? மலையின் சிகரத்தினின்று கங்கை கீழிறங்குகிறது என்பதுதான் நாம் தெரிந்து கொள்ளவேண்டுவது.

ஒரு காலத்திலே திருவிளையாட்டாக உமாதேவியார் சிவபெருமானுடைய திருக்கண்களைத் தம் திருக் கரங்களால் பொத்தினர். இறைவர் இரு கண்களும் சூரிய சந்திரர்: வலக்கண் சூரியன், இடக்கண் சந்திரன். இரு சுடர்களும் மறைந்தன. புவனமுழுவதும் இருண்டது. இருண்டறியாத அமரருலகமும் இருண்டது. உலக காரியங்கள் நடைபெற்றில. கடவுட்பூசையும் இலதாயிற்று. தேவர் முனிவர் மக்கள் அனைவரும்

செய்வதொன்றறியாராயினர். ஆ! ஆ! என இரங்கிப் பதைபதைத்தனர். அம்மையார் திருக்கரத்தால் இறைவர் திருக்கண்களைத் புதைத்த காலம் சிறிதாயினும் உலகத்துக்கு ஊழிக்காலமாயிற்று. உலகம் அலமருதலைக் கண்ட பெருமான் நெற்றிக்கண்ணைச் சிறிதே திறந்தருளினர். அம்மையார் திருக்கரங்களின் பத்து விரல்களினின்றும் வியர்வையுண்டாயிற்று. அந்த நீரே கங்கையாகப் பெருகிற்று. பத்து விரல்களினின்றும் பத்து கங்கைகள் தோன்றின. அவற்றுள் ஒன்று விண்ணுலகத்திலும், ஒன்று சத்தியவுலகத்திலும், ஒன்று வைகுந்தத்திலும் தங்கின. ஏனைய இறைவரின் ஆணையால் ஒவ்வோரிடத்திலே தங்கின. விண்ணுலகத்திலுள்ள கங்கையே பகீரதன் வேண்டுகோளால் மண்ணுலகத்துக்கு வந்தது. அதன் செருக்கையே இறைவர் அடக்கினர். தமது சடையிலுள்ள ஞானகங்கையிலே இந்தக் கங்கையைத் துளியாக அடங்கச்செய்து பின் அவன் வேண்டுகோளால் விட்டருளினர்.

இனி, ஹரத்துவாரத்திலே கங்கைக்குக் கோயில் உண்டு. சிவாலயங்களும் உள. மாயாபுரி என ஹரத்துவாரத்துக்கு வேறு பெயரும் வழங்கும். வடநாட்டிலே பெரும்பாலும் இராமாவதாரம் கிருஷ்ணாவதாரங்களின் பெருமையும், இராமபஜனை கிருஷ்ண பஜனைகளும்தான் தெரியும். சிவமகிமையோ, சிவ வழிபாடோ பெரும்பாலும் கிடையாது. ஹரத்துவார் இமயமலையின் அடிவாரத்தில் உள்ளது. இங்கிருந்து கேதாரிநாத், பத்ரிநாத் செல்லும் யாத்திரிகர்களுக்கு வேண்டிய எல்லாப் பொருள்களும் இங்கே கிடைக்கும். கங்கைச் செம்பு, க்ஷேத்திரப்படங்கள் முதலியன இங்கே விற்கப்படுவன. இவ்விடத்திலுள்ள மக்கள்

யாத்திரீகர்களின் உதவியைநாடியே பிழைக்கின்றனர். ஹரத்துவாரம் மோட்சவாயில் எனவும், தலைவாயில் எனவும் சொல்லப்படும். ஏனெனில், உத்தரதேச யாத்திரை இங்குதான் துவக்கம். இங்கிருந்து ஒன்றரை மைல் தொலைவில் ஒரு அணைக்கட்டு உள்ளது. இந்த அணைக்கட்டு, கங்காநதியை ஏழு பிரிவுகளாகப் பிரிக்கும். கங்காநதியின் வேகம் இவ்விடத்திலே அதிகம். அபிஷேகத்துக்கெனச் சுத்த கங்கையை எடுக்குமிடம் இதுவேயாம். ஹரத்துவாரத்திலே சாதுக்கள் மிகுதியாக வசிக்கின்றனர். ரிஷிகேசத்திலும் சாதுக்கள் இருக்கின்றனர். பெரிய மகான்களும் உளர். தருமச்சாலை, அன்னசத்திரம், ஆசிரமங்கள் பல உள்ளன.

ரிஷிகேசம்: இது ஹரத்துவாரத்திலிருந்து பதினான்குமைல் தொலைவில் உள்ளது. பத்திரி, கேதாரம் யாத்திரை செய்பவர்கள் இங்கிருந்தும் உந்தூர்தியில் செல்லலாம் இவ்விடத்தில் காளி கம்பளிவாலாவின் தர்மம் சிறப்பாக நடைபெறுகின்றது. ரிஷிகேசத்திலிருந்து லட்சுமணஜூலாவுக்குப் போகும் வழியிலே ஆந்திரா ஆசிரமம், சிவானந்தா ஆசிரமங்கள் உள்ளன. இமயமலைச்சாரலில் பலநாள் தவமிருந்து வந்த ஸ்ரீ சுவாமிசத்தியானந்தசரஸ்வதிஜி என்பவரின் முயற்சியால் நடைபெறுவது ஆந்திரா ஆசிரமம். அவருக்கு உதவியாக பிரும்மானந்தா, சித்தானந்தா என்னும் இரண்டு சாதுக்கள் இருந்துவருகின்றனர். ஒருவர் தமிழர், மற்றொருவர் தெலுங்கர். ஆந்திரா ஆசிரமத்தில் தமிழரும் தெலுங்கரும் தங்குவதற்கு வசதிகள் உண்டு.

**சிவானந்தா ஆசிரமம்:** ஆனந்தகுடீர் ஆசிரமம் என்று சொல்லப்படும் இது கங்கையின் கரையில்

அமைக்கப்பட்டிருக்கிறது. ரிஷிகேசத்திலிருந்து ஆறு பர்லாங் தூரமே இந்த ஆசிரமம் இருக்குமிடம் என்பர். ரிஷிகேசத்தில் கூலியாட்களை அமர்த்தித்தரும் அலுவலகமும் உண்டு. லட்சுமணஜுலா என்ற இடத்தில் கங்கையைக் கடக்கத் தொங்குபாலம் இருக்கின்றது. (ஜுலா = தொட்டில்.)

உருத்திரப்பிரயாகை: இங்கே செல்லும் வழிகள் முழுவதும் ஏற்றமும் இறக்கமுமாகவே மிகுதியும் உள்ளன. இதன் வழியாகவே உந்தூர்திகள் செல்ல வேண்டும். ஒருவழிப்பாட்டை (One way-Traffic) யிலேயே உந்தூர்திகள் செல்லுகின்றன. கேதாரம், பத்திரிநாத் செல்வதற்குரிய தனித்தனியான வழிகள் இங்குதான் பிரிகின்றன. நாரதர், அகத்தியர் முதலிய முனிவர்கள் சிவபெருமானை வழிபட்டுப் பேறுபெற்ற உருத்திரேசுவரர் ஆலயம் ஒன்று இங்குள்ளது.

உருத்திரப் பிரயாகைக்கும் ரிஷிகேசத்துக்கும் இடையிலே திருவேணிசங்கமம், நரேந்திரநகர், வியாசர் சட்டி, தேவப்பிரயாகை, ஸ்ரீநகர், நாரதமகாஸ்தலம், கமலேசுவரம் முதலிய தலங்கள் உள்ளன. இராமநதி, சரசுவதிகுண்டம் என்னும் இரண்டு சிற்றாறுகள் கங்கா நதியிலே கலப்பதால் திருவேணிசங்கமம் என இவ்விடம் பெயர்பெற்றது. நரேந்திரநகர் ரிஷிகேசத்தின் எல்லையில் உள்ளது. சிவாலயம் ஒன்று இங்குள்ளது. வியாசர்சட்டி என்பது வேதவியாசர் தங்கித் தவம் செய்த இடம் என்பர். வியாசகங்கை என்னும் நதியொன்று கங்காநதியில் கலக்கிறது. வியாசருக்கு ஒரு கோயில் உண்டு. தேவப்பிரயாகையிலேதான் பாகீரதியும் அலகநந்தாவும் சங்கமமாகின்றன. ஸ்ரீ இராமன்,



ஸ்ரீ கேதாரேசுவரர் கோயிலில் விநாயகர் வழிபாடு



யாத்திரை வழியில் ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள்

உமாதேவி, சிவபிரான் இவர்களுக்கு இங்கே ஆலயம் உள்ளன. தேவப்பிரயாகைக்கு அப்பால்தான் கங்கை என்னும் பெயரோடு இந்த நதி செல்லுகின்றது. கங்கோத்திரி, யமுனேத்திரிக்குச் செல்லச் சாலைவசதி உண்டு.

அலகநந்தாவின்கரையிலே ஸ்ரீநகர் இருக்கின்றது. ஸ்ரீசக்கரம் இந்நகரிலே அமைக்கப்பெற்றதால் வந்த பெயர் இது என்பர் பெரியோர். அகத்தியமுனிசட்டியில் அவரது ஆசிரமமும் கோயிலும் உள. அகத்தியர் வழிபட்ட முருகக்கடவுள் ஆலயம் மலையின் உச்சியிலுள்ளது. ஒருவழிப்பாட்டையிலே செல்லும் உந்தூர்திகள் மாறிச் செல்வதற்கு வியாசர்சட்டி, தேவப்பிரயாகை என்னும் இரண்டிடங்களிலும் அகலமாகச் சாலை அமைக்கப்பட்டிருக்கிறது. ஒருவழிப்பாட்டை கண்டார்க்கு அச்சத்தையும் அதிசயத்தையும் உண்டு பண்ணும். ஒருபுறம் பார்த்தால் ஆயிரக்கணக்கான அடி உயரமுள்ள மலை; மற்றொருபுறம் பாதாளத்தை எட்டிப் பார்ப்பதுபோன்ற பள்ளத்திலே செல்லும் ஆறு. இந்த ஒருவழிப்பாட்டையிலே அரசியலாரின் அநுமதிபெற்ற உந்தூர்திகளைத் தவிர வேறு எந்த வண்டிகளும் செல்லலாகாது. ரிஷிகேசத்திலிருந்தும் கீர்த்திநகரிலிருந்தும் எதிர் எதிராகச் செல்லுகின்ற உந்தூர்திகள் அகலமான சாலைகள் அமைக்கப்பட்ட இடங்களில் மாறியே செல்லவேண்டும்.

ரிஷிகேசத்திலிருந்து தேவப்பிரயாகை நாற்பத்திரண்டு மைல். கங்கைநீரைக் கொண்டுவரும்பொருட்டுத் தேவப்பிரயாகையிலுள்ள ஜனங்கள் பலபடிகளின் வழியாகக் கீழிறங்கிச்சென்றே மீளுவர்.

சென்ற ஆண்டுவரையில் உருத்திரப்பிரயாகையி லிருந்து மேல்நோக்கிச் செல்லுபவர் கால்நடையாகவே செல்லவேண்டியிருந்தது. இப்போது அந்தத் துன்பம் இல்லை. அரசியலார் வழியை உந்தூர்திசெல்லும் நல்ல முறையில் அமைத்து இருக்கின்றனர். உருத்திரப்பிர யாகையிலிருந்து 'குண்டுசட்டி' இருபத்துமூன்று கல் தொலைவு. அதுவரை உந்தூர்தியில் செல்லலாம். குண்டு சட்டியிலிருந்து 'குப்தகாசி' இரண்டு கல்; மேலும் குப்தகாசிவரை வழியைச் செம்மை செய்திருக்கிறார் கள். ஆயினும், அவ்வழி இன்னும் திறந்தபாடில்லை. மற்றும், கௌரீகுண்டம்வரையில் கணவாய்ப் பாதை அமைத்துத்தர முந்துவார்கள் போலும்.

'ஹரத்துவாரம்' செல்லும் இருப்புப்பாதையில் உள்ள 'நஜீபாபேட்' என்னும் சந்திப்பின்வழியே 'கோட்துவாரா'வுக்குச் சென்று, அவ்விடத்திலிருந்தும் உருத்திரப்பிரயாகைக்குச் செல்லுபவர்களும் உண்டு.

ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் கேதார யாத்திரை செய்துவரத் திருவுள்ளங்கொண்டார்கள். 30—4—60 சனிக்கிழமை காலை 4–30 மணி அளவில் வழக்கப்படி செய்யும் ஆன்மார்த்த பூசையை முடிந் தார்கள். ஸ்ரீ ஞானமா நடராசமூர்த்திக்கும், ஆதீன முதற்குரவராகிய ஸ்ரீ நமசிவாயமூர்த்திக்கும் விசேட பூசை நடந்தேறின. பின்பு யாத்திராதானம் முதலிய வற்றையும் செய்தருளினார்கள். ஸ்ரீ திருமாளிகைத் தேவர் சந்நிதியிலும் ஸ்ரீ நமசிவாயமூர்த்தி சந்நிதியிலும் உத்தரவு பெற்றுக்கொண்டார்கள். ஸ்ரீ திருமாளிகைத் தேவர் சந்நிதியில் நூற்றெட்டுச் சிதறுதேங்காய்கள் போடப்பட்டன. பின் ஸ்ரீ மாசிலாமணியீசர்கோயிலில்

வழிபாடு செய்துகொண்டு ஸ்ரீ துணைவந்தவிநாயகர் சந்நிதியிலும் வழக்கப்படி சிதறுதேங்காய்கள் நூற்றெட்டு உடைக்கப்பட்டன. அதன்மேல் உடன்வரும் அடியார் கூட்டங்களை விடைகொடுத்து உந்தூர்தியில் முன்பு போகச்செய்து தாம் தமது உந்தூர்தியிலே எழுந்தருளினார்கள். அன்று காலையில் புறப்பட்ட உந்தூர்திகள் 5-5-60 வியாழக்கிழமை விடியற்காலை மூன்று மணிக்கு ஸ்ரீ காசியை அடைந்தன.

ஸ்ரீ காசியில் 'க்ஷேமேசுரர்காட்'டில் உள்ள தமது ஆதீனமடத்திலே ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானம் எழுந்தருளியிருந்தது. அது 'கண்ணப்பசுவாமி மடம்' என வழங்கப்படும். அந்த மடம் திருவாவடுதுறை ஆதீனத்துக்குச் சொந்தமானது. மகாசந்நிதானம் சிலநாட்கள் ஸ்ரீ காசியில் தங்கியிருந்தார்கள். கங்காஸ்நானமும், ஸ்ரீ விசுவநாதர் தரிசனமும் நன்றாக நடைபெற்றன. 11-5-60 புதன்கிழமை ஸ்ரீ காசியினின்று புறப்பட்டு 12-5-60 வியாழனன்று பகல் சுமார் 10-30 மணிக்கு 'டேராடூன்' (Dehradun) என்ற இடத்துக்கு எழுந்தருளினார்கள். நாங்களும் உடன்சென்றோம். 13-5-60 வெள்ளிக்கிழமை காலையில் பூஜையை முடித்துக் கொண்டு 'முசோரி'க்குச் சென்று அங்கே மலைவளம் முதலியவற்றைக்கண்டு மகிழ்ந்து மாலையில் மறுபடியும் டேராடூனுக்கு ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானத்துடன் திரும்பினோம்.

'முசோரி': இது சமுத்திரமட்டத்துக்கு மேல் 6,500 அடி உயரமுள்ளது. கோடைக்காலத்தில் தென்னாட்டிலுள்ளார் கொடைக்கானல், நீலகிரி முதலிய இடத்துக்குச்சென்று தங்குவதைப்போன்று பம்பாய்,

கல்கத்தா, டெல்லி முதலிய இடங்களிலுள்ளவர்கள் சுகவாசத்துக்காக இவ்விடத்திலேவந்து தங்குவார்கள்; வேனிற்காலம் முடிந்தவுடன் தத்தம் இடத்துக்குத் திரும்புவர். அவ்வூரார்மட்டும் பனிக்காலத்தும், மழைக் காலத்தும் அவ்விடத்திலேயே வசிப்பர். நம்போன்ருர் குளிர்காலத்தில் அங்கே தங்கமுடியாது. முசோரியில் நகராட்சிமன்றம் உண்டு. தந்தி, தபால், டெலிபோன், மருத்துவநிலையம், பள்ளிக்கூடம் முதலியவைகளும் உள்ளன. இந்நகர் எல்லையிலே சுங்கவரி வசூலிக்கப் படுகிறது. உந்தூர்தியில் செல்லும் நபர் ஒன்றுக்கு ஒன்றரை ரூபாயும், சொந்தக்காரிலோ அல்லது வாட கைக்காரிலோ செல்லும் நபர் ஒன்றுக்கு இரண்டு ரூபாயும் சுங்கவரி வாங்கப்படுகிறது. குதிரைவண்டி களுக்கும், ஆடு மாடுகளுக்கும் இவ்வரி உண்டு. இவ் விதம் வசூல் செய்யப்படும் தொகைகளைக்கொண்டு மலையில் பாதை அமைக்கப்படுகிறது; பழுதான சாலை களைச் சீர்செய்யவும் பயன்படுத்தப்படுகிறது. பாதை கள் முழுதும் வளைந்து வளைந்து செல்கின்றன. கடுமை யான ஏற்றமாகவும் உள்ளன. மலையின்மேலே பல பங்களாக்கள் உள. அவைகளெல்லாம் வாடகைக் கட்டிடங்களே. இந்தக் கட்டிடங்கள் மக்களுடைய வசதிக்கென ஆங்கிலேயரின் ஆட்சிக்காலத்திலேயே கட்டப்பட்டன என அங்குள்ளோர் கூறுகின்றனர்.

நேபாளிகளும், சீன வியாபாரிகளும் அங்கே இருக் கின்றனர். கூலியாட்கள் அனைவரும் நேபாளிகளே. பஞ்சாப் நாட்டினர் உணவுச்சாலைகளே மிகுதியாக உள்ளன. அவ்விடுதிகளில் தங்கியிருத்தற்கும் இட வசதியுண்டு. ஆயினும், வாடகை மிக அதிகமானதே. சென்னைவாசிகளின் உணவுவிடுதி ஒன்றுகூட அங்கு

இல்லை. கடைவீதிகள் உள்ளன; எனினும், சாமான்களின் விலை மிக ஏற்றமானது.

மறுநாள் சனிக்கிழமை 14-5-60 காலை 5-30 மணிக்கு டேராடூனிலிருந்து 'ரிஷிகேசம்' வழியே மாலை 5 மணிக்கு உருத்திரப்பிரயாகைக்கு வந்துசேர்ந்தோம். இங்கே வந்து சேர்வதற்குரிய உந்தூர்திக்கு முன்னதாகவே ஏற்பாடுசெய்யப்பட்டிருந்தது.

தேவப்பிரயாகை என்பது தேவர்கள் விரும்பி வாழும் இடம் என்பர். ஸ்ரீ இராமபிரான் இராவணனைச் சங்கரித்ததனுலுண்டாகிய தோஷம் நீங்குதற்குத் தவம்செய்த இடம் இது. இதன் சமீபத்திலே தசரதர் தவம்செய்த இடமும் உளதாகச்சொல்வர். இதன் பக்கத்திலே அருச்சுனன் பாசுபதம்பெற்ற இடமும் உள்ளதாம்.

உருத்திரப்பிரயாகையில் நதி சங்கமமாகின்ற இடத்தில் உருத்திரேசுவரருக்கு ஓர் ஆலயம் உண்டு. இந்த க்ஷேத்திரத்திலே, நாரதர் கானவித்தை உபதேசம் பெற்றார். அகத்தியர்முதலிய முனிவர்கள் தவஞ்செய்து சிவபெருமானைச் சூலபாணியாகத் தரிசித்துப் பேறு பெற்றனர். உருத்திரப்பிரயாகையில் உள்ள கம்பளிவாலா சத்திரத்திலே நாங்கள் தங்கியிருந்தோம். இந்தச் சத்திரத்தில் கூட்டம் அதிகமாயிருந்தது. ஏனெனில், 'குண்டுசட்டி'வரை (23 மைல்) உந்தூர்தி செல்லும் புதிய ஏற்பாடு இந்த ஆண்டிலே உள்ளமையால்தான். இந்த ஆண்டிலே கேதார்நாத் கூட்டம் அதிகம். சென்ற ஆண்டுவரை பத்திரிநாத் கூட்டமே மிகுதி; கேதார்நாத் கூட்டம் குறைவு. கூட்டம் அதிகமாக இருந்தமையினுல் கம்பளிவாலா சத்திரத்தைவிட்டு

நாங்கள் 'சச்சிதானந்த ஆசிரமம்' என்னும் இடத்தைச் சேர்ந்தோம்.

'குண்டுசட்டி'க்குப் பிரயாணச்சீட்டுக்கிடைப்பது பெரிதும் அரிதாயிற்று. ஆதலின் 15—5—60 ஞாயிறு அன்றும் உருத்திரப்பிரயாகையில்தான் தாமதித்திருந் தோம். பின், உந்தூர்திப் பயணச்சீட்டுக்குக் காரியால யத்தில் சென்று முயற்சித்தோம். திங்கட்கிழமை மாலையில் செல்லும் உந்தூர்திக்குச் சீட்டுத்தருவதாக வாக்களித்தனர். எனினும் 16—5—60 திங்கட்கிழமை காலை உந்தூர்திக்குச் சீட்டுக் கிடைத்தால் வாங்கி விடுங்கள்; கிடையாதாயின் நடந்து செல்லுவதற்குச் சித்தமாயிருத்தல் வேண்டும்; இனித் தாமதித்திருத்தல் கூடாது என்று ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானத்தில் கட்டளை யிட்டருளியது. ஸ்ரீ நமசிவாயமூர்த்தியின் பேரருள் முன்னின்றது. 'அடிமையை அளப்பர் போலும் ஆவடுதுறையனுரே' என்பது திருநாவுக்கரசு சுவாமி கள் அருளிய தேவாரப் பாடற்பகுதி. முன்னவனே முன்னின்ருல் முடியாத பொருள் உளதோ? என்பதும் பொய்யாதலின்றே!

திங்கள் மாலை உந்தூர்திக்குச் சீட்டுத் தருவ தாக வாக்களித்தவர் எப்படியோ ஞாயிற்றுக்கிழமை இராத்திரியே உந்தூர்திச்சீட்டைக் கொடுத்துதவினுர். மகாசந்நிதானம் கட்டளைப்படியே திங்கட்கிழமை காலை 5-30 உந்தூர்தியில் செல்லுதற்குரிய சீட்டுக் கிடைத்தமையை எண்ணி எண்ணி மகிழ்ந்தோம்.

16—5—60 திங்களன்று காலை 5-30 மணிக்குப் புறப்பட்ட உந்தூர்தி 8-மணிக்கு 'குண்டுசட்டி'க்கு

வந்துசேர்ந்தது. கங்காநதியும் செல்லும்வழியின் அருகிலேயே எங்களைத் தொடர்ந்து வந்து காட்சியளித்தது. கங்கையாற்றைத் தொடர்ந்து செல்லும்வழி உருத்திரப் பிரயாகையிலிருந்து 'கேதார்நாத்' செல்லுவதாகும். அலகநந்தாவைத் தொடர்ந்து செல்லுவோர் 'பத்திரிநாத்' செல்லலாம்.

யாத்திரை செல்லுவோர் கொண்டுசெல்லுகின்ற சாமான்களை எடைபோட்டுக் கூலிகளிடம் ஒப்படை செய்தற்குரிய காரியாலயம் ஒன்று குண்டுசட்டியில் இருக்கிறது. அந்த அலுவலகத்திலே எங்களுடைய சாமான்களும் எடைபோடப்பட்டன. அவை ஐந்து மணங்கு எடைக்குச் சிறிது குறைவாகவே இருந்தன. ஆகலின், நான்கு கூலியாட்களை அமர்த்திக்கொண்டோம். 'குண்டுசட்டி'யிலிருந்து 'கேதார்நாத்' சென்று மீண்டும் சாமான்களைக் கொண்டுவந்து சேர்க்கும் (ஒரு மணங்கு எடையுள்ளது) ஒருஆளுக்குரிய கூலி ரூபா நாற்பது ஆகின்றது.

இதற்குமேல்தான் யாத்திரிகர்கள் நடந்துசெல்ல வேண்டிய பகுதி. குண்டுசட்டியிலிருந்து 'குப்தகாசி' இரண்டு மைல் தொலைவு. இரண்டு மைல் தொலைவும் மிகவும் கடுமையுள்ள ஏற்றமானவழி. வழிச்செலவின் கடுமைக்குத் தக்கபடியே கதிரவனின் கொடுமையும் அதிகரித்திருந்தது. செல்லும் வழியில் மரநிழல்களைத் தொடர்ந்து காண்பதும் அருமை. எங்கேனும் அரிதாகவுள்ள மரநிழல்களில் சிறிது நேரம் ஒதுங்கியிருந்து இளைப்பாறலாம். இது எங்களுக்குள் பலவகையான எண்ணங்களையும் தோற்றுவித்தது. உலகத்திலே வறுமைக்கொடுமை பெரிது; வறியோருக்குளதாகும்

பசிக்கொடுமையோ அதனினும் பெரிது. எனினும், கொடையுடையோர் மிக அரியர். இத்தனை பெரிய உலகிலே கொடையுடையோர் தொகையை விரல் விட்டு எண்ணிவிடலாம். அவர் கொடைவழங்கும் நிலை பெறுவான் தவத்தையே பொறுத்தது. இதனை மனத்தில் இருந்தினர் திருவள்ளுவநாயனர். அது வாக்கின்வழியாக வெளிப்பட்டது.

"அறிவிலான் நெஞ்சுவந் தீதல் பிறிதியாதும்
இல்லை பெறுவான் தவம்"

என்பதே அது.

எங்கள் நல்வினை ஒரோவழி மரநிழல் கிடைக்கச் செய்ததென மகிழ்ந்தோம். ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானத்தின் பேரருள்நிழலில் தங்கியிருக்கும் பெருமையை உணர்ந்தோம். அவர்கள் அருள்நிழல் எங்கள் உடல் துன்பத்தையும், உள்ளத்துன்பத்தையும் மாற்றுகின்ற மருந்தாக இருந்தது உயிர்ப்பிணியாகிய ஆணவமல நோயை வலிகெடச்செய்யும் ஆசாரியனை அடைந்தோருக்கு இந்நோய்கள் என்ன செய்யும்? இதனினும் உயர்ந்தது வைத்தியநாதமருந்து. ஸ்ரீ வைத்தியநாதரே இவ்வாதீனத்துப் பூஜாமூர்த்தி; அவரே மகாசந்நிதானத்தின் ஆன்மார்த்த பூசைக்கு உரியவர் என்றெல்லாம் நினையச்செய்தன. சிலர் அருந்துணை என்றனர்; அடியார் தம் அல்லல் தீர்க்கும் அருமருந்தென்றனர்; தனைநினைய வல்லோர்க்கு என்றும் பெருந்துணை என்றனர்; அற்றார்க்கும் அலந்தார்க்கும் அருள்செய்யும் அப்பனன்றே நம் அம்பலவாணர் என்றனர்; அவர்தாம் நம் திருவாவடுதுறை ஆதீனத்து அதிகாரமுடையாராகிய ஸ்ரீ ஞானமா நடராசர் என்றனர். 'பேசப்பெரிதும் இனியபெருமானைப்



பனிமலையின் பக்கத்தில் ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள்



ஸ்ரீ கேதாரேசுவரர் ஆலயத்தின் முன்வாயிலில்

பற்றிய பேச்சுக்களாலேயே வழிச்செலவின் துன்பத்தையும் மறந்தவர்களானோம். மறந்தும் என்? மீட்டும் நினையச்செய்தது.

'மறந்துமறந்து நினைப்பதனாலே மறவாமலிருக்கிற அரனுக்கு வேறாய் உயிர் உண்டு' என்னும் சூர்ணியின் நினைவு உண்டாயிற்று. 'புல்லிய மலநோய் தீர்ந்தும் வாதனை தாக்குமாபோல்' இடையிடையே நிழலில்லாத துன்பமும் எங்களை வாட்டியது. 'நிழலின் அருமை வெயிலிலே' என்ற பழமொழியின் பொருளை நன்கு தெளிந்தோம். இது வாய்ப்பேச்சல்ல; செயலளவில் வெளியாயிற்று. இரண்டு கல் தொலைவும் இருபது கல் அளவாகவே எங்களுக்குத் தோன்றியது. இவ்வளவு துன்பங்களிலும் சிறிது இன்பமும் எங்களுக்குக் கிட்டியது. மிக்க அவதியுறும் ஈயின் வாயில் ஒரு தேன்சொட்டு விழுந்ததையே இதற்கு உவமிக்கலாம். தேநீர்க்கடைகள் அங்கங்கே இருந்தன. தேநீர் பருகிக் களை தீர்ந்தோம்; வழியேசென்றோம். இஃது எங்கள் நிலை. ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானத்தின் உள்ளநிலை எங்களினும் எத்தனையோ மாறுபட்டநிலை. அதனை இந்தச் சமயத்தினும் நன்குணர்ந்தோம். அவர்கள் உள்ளத்தினும் சோர்வில்லை; உடலினும் சோர்வில்லை: அதுதான் தவநிலை. அவர்கள் அநாயாசமாகச் செல்லும் செலவு எங்களுக்கு ஒருபக்கம் உற்சாகமூட்டியது. அவர்களுடன் தொடர்ந்து செல்லுகின்ற பாக்கியம் அடிக்கடி நிகழாமல் தவறுவதால் வருத்தத்தையும் உண்டுபண்ணியது.

"சுடுதற்கு ஏதுவாகிய அங்கியைத் தம்பனம் செய்யவல்லார் அவ்வங்கியுள் முழுகிக்கிடப்பினும்

அதுபற்றி அவர்மாட்டுச் சூடு நிகழாது. கொலைத் தொழிற்கேதுவாகிய விடங்களைத் தடுக்கவல்லமந்திரம் மருந்துகளைப்பெற்றுடையார் அவ்விடங்களையெல்லாம் நிறையப்பருகினும் அதுபற்றி அவர்மாட்டுக் கொலைத் தொழில் நிகழாது. அதுபோல, விருப்பு வெறுப்புக்கள் நிகழ்தற்கு ஏதுவாகிய இந்திரியங்களை மேற்கூறிய முறையினின்று தம் வழிப்படுத்தவல்ல ஞானிகள் எவ் விந்திரியங்களினின்று எத்தொழிலைச் செய்தார்களா யினும் அதுபற்றி அவர்மாட்டு விருப்பு வெறுப்பு நிகழ்ந்து மேலைக்கு வித்தாதல் செல்லாது. ஏனைப் பிராரத்த வினையும் தற்பணிநீத்த அவர்மாட்டுத் தலைக் கூடமாட்டாது; வெந்தபடம்போலச் சத்தி கெட்டே போய் வாசனைமாத்திரையாய் நின்று சிறிதே தாக்கும். அவ்வளவேயன்றி வாதனையாற் செய்யக்கடவது பிறி தில்லை'' என்க.

இந்நிலை எங்கள் குருமகாசந்நிதானத்தின் விஷயத் தில் விசதமாயிற்று. அடிக்கடி யாத்திரையில் நாங்கள் கண்ட அநுபவத்தினும் இந்த யாத்திரையிலே எங்கள் அநுபவம் மிகுதியாயிற்று. குண்டுசட்டியில் 9-30 மணிக்குப் புறப்பட்டு 12 மணியளவில் 'குப்தகாசியை' அடைந்தோம். அன்றிரவு முழுவதும் குப்தகாசியிலே கழிந்தது.

உத்தரகாசி, ஸ்ரீ காசி, குப்தகாசி என மூன்று காசிகள் உள்ளன. உத்தரகாசி கங்கோத்திரியிலிருந்து கேதாரம் செல்லும் வழியில் உள்ளது.

ஸ்ரீ காசி என்பது வாரணசி என்னும் தலமே. இங்கே ஸ்ரீ விசாலாட்சியம்பிகை சமேத ஸ்ரீ விசுவ நாதர் எழுந்தருளியுள்ளார். வாரணை, அசி என்னும்

இரு நதிகளின் கலப்பால் வந்த பெயர் என்பர். ''சார்ந் தவர் பாவம் தகைதலால் வரணை என்றும், ஆர்ந்தநீர் படிந்தோர் பாவம் அறுத்தலால் அசியே யென்றும் சேர்ந்தன நாமம்'' என்பது காசிகண்டம்.

குப்தகாசி என்பது உருத்திரப்பிரயாகையிலிருந்து கேதாரம் செல்லும்வழியில் உள்ளது. குப்தம் என்றால் இரகசியம். இமயத்தில் ஓர் (குகை) இடத்தில் குப்தமா யிருப்பதால் இப்பெயர் வந்ததென்பர். 'குப்தகாசி' கடல் மட்டத்திலிருந்து 4,500 அடி உயரத்திலே உள்ளது. வாணாசுரன் தவஞ்செய்து பேறுபெற்ற இடம் இது. அவன் மகள் உஷை என்பவள், இங்கே தவம்புரிந்து உபதேசம் பெற்றாள். குப்தகாசியில் கங்கையும் யமுனையும் இரண்டு தாரைகளாக வீழ்வ தைக் காணலாம். விசுவநாதர் ஆலயம் ஒன்று உண்டு; அங்கே ஸ்ரீ நடராசர் திருவுரு மிக அழகாக உள்ளது. கங்கை யமுனை ஆகிய இரண்டு அருவிகளில் மக்கள் நீராடும்பொருட்டு அகன்றதொட்டி ஒன்று அமைக்கப் பட்டிருக்கிறது. குப்தகாசியில் சுயம்பு மூர்த்தியே உள்ளது; அந்த மூர்த்தி ஒரு சிறு மலைப்பகுதியே போலும்.

**காளிமடம்:** இது குப்தகாசியிலிருந்து சுமார் மூன்று மைல் தொலைவில் உள்ளது. இங்கே காளி கங்கையும் மந்தாகினியும் ஒன்றுசேர்கின்றன.

**நாலாச்சட்டி:** நளச்சட்டி என்பதன் திரிபு இது. இங்கே நளனுக்குக் கோயில் உண்டு. சட்டி என்பது யாத்திரீகர் தங்கிச் செல்வதற்கு வழியிலே கட்டிவைத் துள்ள விடுதி என்று பொருள்படும். (சட்டி - சத்திரம்.)

மெய்கண்டசட்டி: (மைகண்டசட்டி) அம்பிகை மகிஷாசுரனைக் கொன்று, இரண்டாகப்பிளந்து இரு புறத்தும் வீசியதாக இங்கே ஐதிகம். 'மகிஷகண்டம்' என இம்மலைக்குப் பெயர் வழங்குகிறது. மகிஷம் - எருமை. எருமைக்கடா வடிவிலே வந்த அசுரனைச் சங்கரித்த அவசரம் மகிஷாசுர மர்த்தனி என்பதாம்.

பாட்டாசட்டி: 17—5—60 செவ்வாய்க்கிழமை காலையில் குப்தகாசியிலிருந்து புறப்பட்டுப் பாட்டா சட்டியை வந்து அடைவதற்கு 10 மணி ஆயிற்று. வழி மிக ஏற்றமும் சமபூமியுமாகவே உள்ளது. எனினும், நடப்பதற்கு அதிகத்துன்பமில்லை. ஏழு கல் தொலைவுதான். இங்குள்ள மலை ஜமதக்னிமலை எனப் படும். இங்கே ஜமதக்னிமுனிவர் ஆசிரமமும் கோயி லும் உள்ளன. பாட்டாசட்டியில் ஒரு கடையின் மேல்மாடியில் தங்கியிருந்தோம். குளிர் அதிகமாக இருந்தது. பருத்தி நூலாடை அணிவது குப்தகாசி வரையில்தான் இயலும். அதற்குமேலே நூலாடை செல்லாது. கம்பளிச்சட்டையும் கம்பளிப்போர்வை யும் அவசியமாகத் தேவையானது. இங்கே பனிமழை பெய்யும். அன்றிரவு பாட்டாசட்டியில் கழிந்தது. இவ்விடத்தில் தபாலாபீஸ், ஆஸ்பத்திரி முதலியன உண்டு. ஸ்ரீகாசியிலே நாங்கள் சேகரம் செய்து வைத் திருந்த கம்பளப் போர்வைகளும் கம்பளச் சட்டை களும் இங்கே பயன்பட்டன.

ராம்பூர்: 18—5—60 புதன்கிழமை காலை 7 மணி அளவில் பாட்டாசட்டியிலிருந்து புறப்பட்டுச் சுமார் 10 மணிக்கு 'ராம்பூர்' என்ற இடத்தை அடைந்தோம். ராம்பூர் அவ்விடமிருந்து நாலரைக்கல் தொலைவு.

இங்கே 'ராம்பூர்' வரையிலுள்ள வழிநடைப் பயணத்திலே வெப்பம் அதிகமாகத் தோற்றவில்லை. வழிமுழுவதும் மரங்களின் அடர்ச்சி, அருவிகள் வீழ்தலின் பலவகைக்காட்சி, இளங்காற்று ஆகிய இவைகளால் கண்ணுக்கு இனிமையும், கருத்துக்கும் உடலுக்கும் சோர்வின்மையும் உண்டாயிற்று. அன்று இரவு ராம்பூரிலேயே தங்கினோம். அங்கே கம்பளி வாலா சத்திரம் இருக்கிறது.

**கௌரீகுண்டம்:** 19—5—60 வியாழனன்று காலை ராம்பூரிலிருந்து கௌரீகுண்டத்தை அடைந்தோம். இது சிறந்த தலம். தேவாரத்திருப்பதிகம் பெற்றுள்ள '**அநேகதங்காவதம்**' என்னும் சிவதலமே இது. இங்கே சுயம்பு மூர்த்தியாக இறைவர் எழுந்தருளியுள்ளார். திரிசூலம் ஒன்று அமைக்கப்பட்டுள்ளது. எதிரிலே சிவாலயமும் அம்பிகை ஆலயமும் உள்ளன. கௌரீகுண்டம் என்னும் பெயரையுடைய ஒரு தீர்த்தமும் உள்ளது. இதன் பக்கத்திலே ஒரு வெந்நீர் ஊற்று உண்டு. அது 'தப்தகுண்டம்' என்னும் பெயரால் வழங்கப்படும். சதுரமான தொட்டி போன்ற ஒரு பள்ளத்தில் வெந்நீர் அருவி எப்போதும் வீழ்ந்து கொண்டே இருக்கின்றது. அந்த நீர் மிகச் சூடானதாகவே உள்ளது. தொட்டிபோன்ற இடத்தில் நாம் இறங்கிக் குளிக்கலாம். இடுப்பளவு ஆழமேதான். உடம்பின் அயர்ச்சி இதில் குளிப்பதால் நீங்கும். இன்பமாகவே இருக்கிறது. அதில் நாங்களும் குளித்து வழிப்பயணத்தால் உண்டாகிய களைதீர்ந்தோம். உடல் வலியும் நீங்கியது. அந்த வெந்நீர் ஊற்றின் அருகிலே 'மந்தாகினி' என்ற நதி ஓடுகிறது. சுமார் 15 அல்லது 20 அடி தூரந்தான் இருக்கும்.

கருணையே வடிவமாயுள்ள அம்பிகை பெயரால் உள்ள தலமும், தீர்த்தமும் எங்களுக்கு மன எழுச்சியையும் அமைதியையும் கொடுத்தமைக்குப் பாராட்டினோம். 'அருளது சத்தியாகும் அரன்றனக்கு' என்ற சித்தியாரின் பாடல் நினைவுக்குவந்தது. ஆன்மாக்களின் மேல் இறைவன்கொண்ட கருணையாலே மூர்த்தி தலம் தீர்த்தமாக உருக்கொண்டு விளங்குதல் கண்டு இன்புற்றோம். 'கௌரீகுண்டம்' என்னும் இடம் கடல் மட்டத்துக்கு மேல் 6000 அடி உயரத்தில் உள்ளது. அங்கே குளிர் மிகுதியாயிருந்தது. அதனால், நாங்கள் எல்லோரும் கம்பளி உடைகளை உடுத்திக்கொண்டோம். இந்த இடத்திலிருந்து 'கேதாரம்' ஏழுமைல் தூரமுண்டு. வழி மிகக் கரடுமுரடு நிரம்பியது. மிக்க ஏற்றமுள்ளது. நடைபாதையின் அகலம் மூன்றடியே இருக்கிறது. ஒருபக்கம் மேலோங்கிய மலை, மற்றொரு பக்கம் பாதலம்வரை காணும் பள்ளம். இந்தநிலையிலே எவருக்காயினும் வழியையன்றி வேறெங்கேனும் கண்ணேனும் கருத்தேனும் செல்லுமா? வழிமேல் விழி வைத்தே நடந்து செல்லவேண்டும். அதிலும் ஓரத்தில் செல்லாதபடி நடுப்பாதையிலேயே செல்லுதலும் வேண்டும். அன்றிரவு 'கௌரீகுண்டத்திலே' கழிந்தது.

'ராம்பாடா' : 20-5-60 வெள்ளிக்கிழமை அன்று கௌரீகுண்டத்திலிருந்து 'ராம்பாடா'வுக்கு வந்து சேர்ந்தோம். இடையில் உள்ளது இரண்டு மைல் தூரம்தான். 'ராம்பாடா' கடல் மட்டத்திலிருந்து 10,000 அடி உயரம். யாத்திரை செல்வோர் இந்த இரண்டுமைல் தூரமும் சிரமப்பட்டே ஏறவேண்டும். இங்கேயும் கம்பளிவாலா சத்திரம் உண்டு. நாங்களும் அன்று இரவு 'ராம்பாடா'விலேயே தங்கியிருந்தோம்.

21–5–60 சனிக்கிழமை காலையில் 'ராம்பாடா'வி லிருந்து புறப்பட்டுப் பகல் 1–15 மணிக்குக் 'கேதார் நாத்' போய்ச் சேர்ந்தோம். 'ராம்பாடா'விலிருந்து 'கேதார்நாத்' செல்லும் வழியில் ஏற்றம் குறைவே. அந்த ஏற்றமும் 'க்ருடியாசட்டி' வரையில்தான். அது இரண்டுமைல் தூரத்திலுள்ளது. கருடியா சட்டிக்குப் பிறகு ஏற்றமில்லை; சமபூமிதான். இவ்விடத்தில் பனி உறைந்திருக்கும். எங்களுக்கு இதுவரையில் உள்ள எல்லாச் சிரமங்களும்தீர்ந்தன. கேதாரத்தை அடைந்த குறிக்கோள் எல்லாவற்றையும் மறக்கச்செய்தது.

இரவு ஸ்ரீ கேதாரநாதரைத் தரிசித்தோம். சிந்தனை யெல்லாம் கேதாரநாதர் திருவடிகளிலேயே இருந்தன. நித்திரையே வரவில்லை. கேதாரநாதர் சிந்தனை உள்ளத் திலே, சிந்தனை நடுக்கமில்லாத உள்ளத்திலே. குளிரின் கொடுமை உடலை நடுங்கச்செய்தது. பல சாதனங் களால் நடுக்கத்தைத் தீர்த்துக்கொள்ள முயன்றோம். ஒருவாறு அவை பயன்பட்டன; முற்றும் பயன் பட்டன என்று எங்களில் எவரும் சொல்லிக்கொள்ள இயலாது. நாம் சில சமயங்களில் உள்ளம் குளிர்ந்தது, உடல் குளிர்ந்தது என்று சொல்லிப் பெருமிதம் அடை வோமே! அந்தக் குளிர் பொய்; இங்கேதான் அந்தக் குளிரின் மெய்ம்மை வெளியாம். ஒரே நடுக்கம். நடுக்கந் தீர்ப்பவர் கேதாரநாதரையன்றி வேறு எவருளர்? உயிர் நடுக்கந் தீர்க்கும் உமையொருபாகர் உடல் நடுக்கத் தையும், உள நடுக்கத்தையும் தீர்ப்பார் என்பதைச் சொல்லவும் வேண்டுமோ ?

**திருக்கேதாரம் :** நம் யாத்திரையின் குறிக்கோள் ஸ்ரீ கேதாரநாதரைத் தரிசித்து வணங்குவதன்றோ ?

ஆதலின், திருக்கேதாரத்தைப்பற்றிய செய்திகளையும் அறிந்துகொள்ளுதல் இன்றியமையாததே. கேதாரத் தலம் சிறந்ததென்பது யாவருக்கும் தெரிந்ததே. நூல் களும் அத்தலத்தைச் சிறப்பித்துக்கூறும். பாண்டவர் ஐவரும் மண்ணுலகைவிட்டுச் சுவர்க்கம்புகப் புறப் பட்டுச் சென்றனர்; செல்லும் வழியிலே தலங்களை யெல்லாம் தரிசித்து வழிபட்டனர்; இத்திருக்கேதா ரத்தை அடைந்தனர். மிகவிரைவிலே சுவர்க்கவுலகம் புக விருப்பங்கொண்டான் வீமன். சிவபெருமான் வீமனுக்கு எருமையுருவிலே காட்சி கொடுத்தருளினர். எருமை மிக விரைந்து சென்றது. அந்த வடிவத்திலே இறைவனைக்கண்டு வணங்கினன். இந்த ஐதிகத்தையே ஸ்ரீ காசியில் உள்ள ஸ்ரீ கேதாரகட்டத்தில் கேதாரநாதர் கோயிலும் காட்டி நிற்பதைக்காணலாம்.

ஸ்ரீ கேதாரேசுரர், கேதாரகௌரி, வீரபத்திரர், கார்த்திகேயர், விநாயகர், நந்திதேவர், கிருஷ்ணன், திரௌபதியுடன் கூடிய பஞ்சபாண்டவர் முதலிய மூர்த்தங்கள் கேதாரத்தில் உள்ளன. விஷ்ணுமூர்த்தி வடிவமும் உள்ளது. இதனைப்போலவே பத்திரியில் சிவலிங்கவடிவமும் இருக்கிறது.

கேதாரத்திலே மந்தாகினி நதியில் நீராடுவது மிகக் கஷ்டம். கடுங்குளிர்; ஆகலின், நீரில் காலைவைக்கவே முடியாது. நரம்புகளெல்லாம் நம் வசத்தில் நில்லா. மனம் திடமாக உள்ளவர்களாயினும் உடல் அவர் வசத்தில் இராது. எத்தனை துன்பமாயினும் முடிவில் கிடைக்கும் இன்பநிலை கேதாரநாதர் தரிசனம். அந்தத் தரிசனம் ஒன்றே அத்தனை துன்பங்களும் நீங்குதற் குரிய வழியாம். பயனும் அதுவே.

22-5-60 ஞாயிற்றுக்கிழமை காலையில் மந்தாகினி நதியில் நீராடினேம்; காலை தரிசனத்துக்குச் சென்றேம். பூசைக்குரிய பொருள்கள் யாவும் சித்தமாயிருந்தன. விநாயகக்கடவுளைத் தரிசித்துக்கொண்டு கேதாரநாதர் சந்நிதியை அடைந்தோம். கேதாரநாதர் தரிசனம் எங்களுக்குக் கிடைத்தது. அப்பெருமான் கொடுத்தருளிய தரிசனக்காட்சி "என்று வந்தாய் என்னும் எம்பெருமான்றன் திருக்குறிப்பே" என்ற திருநாவுக்கரசுசுவாமிகளின் தேவாரப்பகுதியை நினைவூட்டியதுபோலிருந்தது. 'ஒன்றியிருந்து நினைமின்கள்' என்ற பாடலின் முதலடியை, குருமகாசந்நிதானம் திருவாய்மலர்ந்தருளியது. கூடவந்த தேவார ஓதுவார் அந்தத் தேவாரப்பாடலைப் பண்முறைப்படி ஓதினர். நாங்களெல்லாரும் மிக்க விழிப்புடன் வேறென்றிலும் செல்லாதபடி பாடலின் பொருளையுணர்ந்து சுவைத்தோம். மேலும் சில தேவாரப்பாடல்கள் இசையுடன் பாடப்பட்டன. இறைவனை எப்படித் தியானித்தல் வேண்டும் என்பதை, குருமகாசந்நிதானம் எங்களுக்கு அறிவுறுத்திய குறிப்பு எங்களை இன்பநிலையில் இருத்தியது. குருமகாசந்நிதானம் ஸ்ரீ கேதாரநாதருக்கு விலையுயர்ந்த பட்டாடை ஒன்றை அணிவித்துத் தரிசனம் செய்தருளினர்கள். வழிபாடும் சிறப்புற முடிந்தது.

பண்டாவின் உபசரிப்பு: கேதார்நாத் முதலிய இடங்களில் பூசைசெய்பவர்கள் 'பண்டாக்கள்' என அழைக்கப்படுவர். 'ஸ்ரீ கணேஷ் சங்கர் பண்டா' என்பவர் பூசை செய்கின்றவர்களுள் ஒருவர். அவர், மகாசந்நிதானம் அடியார்கூட்டத்துடன் 'கேதார்நாத்' வருவதை முன்னரே அறிந்துகொண்டார். எப்படி அறிந்துகொண்டார் என்பது சொல்லவொண்ணுது.

அவர் இரண்டு மைல் தொலைவில் எதிர்கொண்டுவந்து சந்தித்தார். 'தொண்டர் அஞ்சு களிறும்' என்னும் தேவாரப்பாடலைக்கூறி எங்கள் அனைவருக்கும் விபூதிப் பிரசாதம் வழங்கினர். அவர் அந்தப் பாடலை 'இந்தி' எழுத்தில் எழுதி நெட்டுருப்பண்ணியுள்ளார் என்பது தெரிந்தது. எங்களை அழைத்துச்சென்று இடவசதி முதலியன அளித்து நன்கு உபசாரம்செய்தார். மேலும் ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானம் கேதாரநாதர்தரிசனம்செய்து திரும்பும்வரை காலை 8-மணி முதல் 9 வரையில் வேறு எவரையும் அங்கே தரிசனத்துக்கு அநுமதிக்காமல் தரிசனம் செய்வித்தார். 'ஸ்ரீ கணேஷ் சங்கர் பண்டா' எங்களுக்குச் செய்துவைத்த தனித்த தரிசனம் பேரானந்தத்தை உண்டுபண்ணியது. பண்டா அவர்கள் செய்த இந்த உதவி மறக்கத்தக்கதன்று. விலையுயர்ந்த சால்வையொன்றை மகாசந்நிதானம் அவர்கள் பண்டா அவர்களுக்கு அளித்தருளினர்கள்.

கேதாரநாதரைத் தரிசனம் செய்தபின்பு வலமாக வந்து, கேதாரகௌரியையும், மற்றும் அங்கு உள்ள பிற மூர்த்திகளையும் தரிசனம் செய்துகொண்டோம். பாண்டவர்கள் 'கேதார்நாத்'தில் தவம் செய்துகொண்டிருக்கும்போது கேதாரநாதர் தோன்றினர் என அந்த நாட்டுமக்கள் கூறுகின்றனர். இவ்விடத்திலிருந்துதான் பாண்டவர்கள் விண்ணுலகம் சென்றனர்கள் என்றும் சொல்லுகின்றனர். ஆலயத்தின் வெளிப்புறத்தில் வந்து பார்த்தால் 'கயிலாயமலை' தெரிவதாகக்கூறி எங்கட்கு அங்குள்ளார் காட்டினர்; காட்டியவழியே நாங்களும் கைகூப்பிக் கயிலையை வணங்கினேம். கேதாரம் கடல் மட்டத்துக்குமேல் 11,750 அடி உயரத்திலிருக்கிறது.

அங்குள்ள மக்கள், குளிரின் கொடுமையைத் தணித்துக்கொள்ளும்பொருட்டு வீடுகளின் உட்புறத்திலே, தரை சுவர் முதலிய இடங்களில் மரப்பலகைகளைப் பரப்பியிருக்கிறார்கள். அன்று பகல் 10-30 மணிக்குக் கேதாரநாதரிடம் பிரியாவிடைபெற்று, மனத்தை அவர் திருவருளில் இருத்தித் திரும்பி வரலானோம்.

**வரும் வழி:** 22-5-60 ஞாயிற்றுக்கிழமை காலை 10-30-க்குக் 'கேதார்நாத்' என்ற இடத்திலிருந்து 'கௌரீகுண்டம்' வந்து சேர்ந்தோம். மாலைப்பொழுதும் ஆயிற்று. இரவு அங்கேயே தங்கினோம்.

23—5—60 திங்கட்கிழமை அன்று காலையிலேயே கௌரீகுண்டத்தைவிட்டுப் புறப்பட்டுப் பாட்டா சட்டியை அடைந்தோம். அன்றிரவு பாட்டாசட்டியில் தங்கி யாவரும் இளைப்பாறியிருந்தோம். 24-5-60 செவ்வாய்க்கிழமை பாட்டாசட்டியிலிருந்து புறப்பட்டு, குண்டுசட்டியிலுள்ள உந்தூர்தி நிலையத்துக்கு மெல்ல வந்துசேர்ந்தோம். பின் உந்தூர்தியில் ஏறிக் குண்டுசட்டியிலிருந்து அன்று மாலையில் உருத்திரப் பிரயாகைக்கு வந்துசேர்ந்தோம். அன்றிரவு உருத்திரப் பிரயாகையில் எங்கட்குக் கழிந்தது.

25—5—60 புதன்கிழமை. காலை 7-30-மணிக்கு உருத்திரப்பிரயாகையிலிருந்து பகல் 11-மணியளவுக்கு ஸ்ரீநகரை வந்தடைந்தோம். அமாவாசை நாளாகலின் அங்கு கங்கையில் நீராடினோம். உணவு முதலியவைகளையும் முடித்துக்கொண்டு பிற்பகல் 2-30 மணிக்கு உந்தூர்தியிலேறி 'ரிஷிகேசம்' இரவு 7-30 மணிக்கு வந்து சேர்ந்தோம். அவ்விடத்திலே தனி உந்தூர்தி

ஒன்றை அமர்த்திக்கொண்டு உடனே புறப்பட்டு இரவு 9 மணிக்கு 'டேராடூன்' என்ற இடத்தை அடைந்து அங்கே தங்கியிருந்தோம்.

26–5–60. வியாழக்கிழமை. மாலை 6 மணிக்குப் புறப்பட்டு மறுநாள் 27–5–60 வெள்ளியன்று மாலை ஸ்ரீ காசியை வந்தடைந்தோம். ஆதீனத்துக்குச் சொந்த மான கண்ணப்பர்மடத்திலே தங்கினோம். யாத்திரை செய்த இளைப்பும் களைப்புந்தீர சிலநாட்கள் ஸ்ரீகாசியில் தங்கிச்செல்லலாமென சந்நிதானத்தில் உத்தரவாயிற்று. கங்காஸ்நானமும். ஸ்ரீ காசி விசுவநாதர் தரிசனமும் நன்றாகக்கிடைத்தது. திருவருளையும் குருவருளையும் எண்ணியெண்ணி மகிழ்ந்தோம்.

பின்பு ஸ்ரீ காசியைவிட்டுப் புறப்பட்டு உந்தூர்தி யிலேயே 5—6—60 ஞாயிற்றுக்கிழமை விடியற்காலம் திருவாவடுதுறை ஆதீனமடாலயத்தை அடைந்தோம். ஸ்ரீ பஞ்சாக்கர பரமாசாரியரையும் ஸ்ரீ திருமாளிகைத் தேவரையும் வழிபட்டு, இடைவிடாது எங்களைப் பாதுகாக்கும் பெருங்கருணைத் திறத்தை நினைந்து இன்புற்றோம்.

திருவாவடுதுறையினின்று புறப்பட்டுக் கேதா ரத்தையடைந்து தரிசித்து மீட்டும் திருவாவடுதுறைக்கு வந்துசேருகின்ற அளவும் இடையூறு ஒன்றுமின்றி எங்களைப் பாதுகாத்த திருவருளையும் குருவருளையுமே சிந்தித்திருப்பதன்றி வேறென்ன செய்யக்கடவோம். அன்னைக்குத் துணைவந்தவிநாயகர் எங்களுக்கும் துணை வந்த விநாயகராகவே அருளினர்.

---

## தொலைவைக் கவனிப்போம்.

| | | |
|---|---|---|
| ஹரத்துவாரத்திலிருந்து ரிஷிகேசம் | மைல் | 14 |
| ரிஷிகேசம் to கீர்த்திநகர் ... | ... | 60 |
| கீர்த்திநகர் to ஸ்ரீநகர் ... | ... | 3 |
| ஸ்ரீநகர் to உருத்திரப்பிரயாகை | ... | 18 |
| உருத்திரப்பிரயாகை to சத்தோலி | ... | 4½ |
| சத்தோலி to அகஸ்தியமுனிசட்டி | ... | 6 |
| அகஸ்தியமுனிசட்டி to சந்திராபுரி | ... | 4½ |
| சந்திராபுரி to குண்டுசட்டி ... | ... | 7 |
| | | 117 |

ஆக நூற்றுப்பதினேழு மைலுக்கு இப்போது உந்தூர்திகள் செல்கின்றன. பின்பு, கால்நடைப் பயணம் ஆரம்பமாகிறது.

## கால்நடைத்தொலைவு.

| | | |
|---|---|---|
| குண்டுசட்டி to குப்தகாசி ... | மைல் | 2 |
| குப்தகாசி to வியூங்சட்டி ... | ... | 4½ |
| வியூங்சட்டி to பாட்டாசட்டி | ... | 3 |
| பாட்டாசட்டி to ராம்பூர் ... | ... | 4½ |
| ராம்பூர் to கௌரீகுண்டம் ... | ... | 5 |
| கௌரீகுண்டம் to ராம்பாடா... | ... | 4 |
| ராம்பாடா to கருடியாசட்டி ... | ... | 2 |
| கருடியாசட்டி to திருக்கேதாரம் | ... | 1 |
| | | 26 |

ஆக இருபத்தாறுமைல் கால்நடையாகச் செல்ல வேண்டும். ஹரத்துவாரத்திலிருந்து திருக்கேதாரம் நூற்றுநாற்பத்துமூன்றுமைல்.

## முதலுதவி. (First Aid)

யாத்திரை செல்லுகின்றபோது எதிர்பாராதவகையில் உடல்நலக்குறைவு ஏற்படலாம். அதற்காக நம் கைவசம் என்னென்ன மருந்துகள் தேவை என்பதைப் பார்ப்போம்.

1. டின்ஞ்சர் பென்ஜாயின் (Tincture Benzoin)
2. டின்ஞ்சர் அயோடின் (Tincture Iodine)
3. காஸ் (Gauze)
4. பஞ்சு (Cotton)
5. பாண்டேஜ் (Bandage)
6. பிளாஸ்திரி (Plaster)
7. C. A. Q.—ஜலதோஷத்திற்கு
8. அனஸின்—தலைவலிக்கும் மார்சளிக்கும்
9. சாரிடான்—உடம்புவலிக்கு
10. கோடாபைரின்—ஜ்வரத்திற்கு
11. ஆலிவ் ஆயில்—தேகத்தில் தடவிக்கொள்ள
12. ஸெல்பர்மேடின்பௌடர்—இரணத்தில் போட்டு கட்டிக்கொள்ள
13. ஹீலட்ஸ் மிக்ஸர்—பேதி, வயிற்றுவலி இவைகளுக்குச் சாப்பிட
14. ஸ்பிரிட் அம்மோ அரோமேட்ஸ்—மயக்கத்திற்கு.

## முக்கிய சாமான்கள்.

1. கம்பளி விரிப்பு
2. படுக்கை
3. கம்பளிச்சட்டை (Woollen Shirt)
4. கம்பளிப்போர்வை
5. கையுறை
6. காலுறை
7. கான்வாஸ் பூட்ஸ்
8. மழைச்சட்டை (Rain Coat)
9. வேஷ்டி (பருத்திஆடை) 3
10. துண்டு 3
11. பனியன் 2
12. கைத்தடி
13. அலுமினியம்பாத்திரங்கள்
14. பிளாஸ்க் (Flask)
15. ஹார்லிக்ஸ்
16. பழைய எலுமிச்சங்காய் அல்லது நாரத்தங்காய் உப்புப்போட்ட ஊறுகாய்
17. ஹரிக்கேன்லைட்
18. டார்ச்சுலைட்

இவைகளைத் தேவையான அளவு கொண்டுபோக வேண்டும்.

---

ഉ

சிவமயம்

# திருக்கேதாரத்திருப்பதிகங்கள்

---

## திருஞானசம்பந்தசுவாமிகள் அருளியது

### பண் – செவ்வழி

திருச்சிற்றம்பலம்

தொண்டரஞ்சு களிறும் மடக்கிச் சுரும்பார்மலர்
இண்டை கட்டி வழிபாடு செய்யும் இடமென்பரால்
வண்டுபாட மயிலால மான்கன்று துள்ளவ்வரி
கெண்டைபாயச் சுனைநீல மொட்டலருங் கேதாரமே. 1

பாதம் விண்ணோர் பலரும் பரவிப் பணிந்தேத்தவே
வேதம் நான்கும் பதினெட்டொடாறும் விரித்தார்க்கிடம்
தாதுவிண்டம் மதுவுண்டு மிண்டிவ்வரு வண்டினம்
கீதம்பாட மடமந்தி கேட்டுகளும் கேதாரமே. 2

முந்திவந்து புரோதாயம் மூழ்கி முனிகள்பலர்
எந்தை பெம்மானெனநின் றிறைஞ்சும் இடமென்பரால்
மந்திபாயச் சரேலச் சொரிந்தும் முரிந்துக்கபூக்
கெந்தநாறக் கிளருஞ் சடையெந்தை கேதாரமே. 3

உள்ளமிக்கார் குதிரைம் முகத்தார் ஒருகாலர்கள்
எள்கலில்லா இமையோர்கள் சேரும் இடமென்பரால்
பிள்ளைதுள்ளிக் கிள்ளைபயில்வ கேட்டுப் பிரியாதுபோய்க்
கிள்ளையேனற் கதிர்கொணர்ந்து வாய்ப்பெய்யுங்
கேதாரமே. 4

ஊழியூழி யுணர்வார்கள் வேதத்தின் ஒண் பொருள்களால்
வாழியெந்தையென வந்திறைஞ்சும் இடமென்பரால்
மேழிதாங்கி யுழுவார்கள் போலவ் விரைதேரிய
கேழல்பூழ்தி கிளைக்க மணிசிந்தும் கேதாரமே. 5

நீறுபூசி நிலத்துண்டு நீர்மூழ்கி நீள்வரை தன்மேல்
தேறு சிந்தையுடையார்கள் சேரும் இடமென்பரால்
ஏறிமாவின் கனியும்பலாவின் னிருஞ்சுளைகளும்
கீறிநாளும் முசுக்கிளையொ டுண்டுகளும் கேதாரமே. 6

மடந்தைபாகத் தடக்கிம் மறையோதி வானோர்தொழத்
தொடர்ந்த நம்மேல் வினைதீர்க்க நின்றார்க்கிடமென்பரால்
உடைந்த காற்றுக்குயர் வேங்கைபூத்துதிரக்கல் லறைகண்
கிடந்தவேங்கை சினமாமுகம் செய்யும் கேதாரமே. [மேல்

அரவமுந்நீர் அணியிலங்கைக்கோனை யருவரைதனால்
வெருவவூன்றி விரலாலடர்த்தார்க் கிடமென்பரால்
குரவங்கோங்கம் குளிர்பிண்டி ஞாழல் சுரபுன்னைமேல்
கிரமமாக வரிவண்டு பண்செய்யும் கேதாரமே. 8

ஆழ்ந்துகாணார் உயர்ந்தெய்த கில்லார் அலமந்தவர்
தாழ்ந்துதந்தம் முடிசாய நின்றார்க்கிடமென்பரால்
வீழ்ந்துசெற்றுந் நிழற்கிறங்கும் வேழத்தின் வெண்மருப்பி
கீழ்ந்துசிங்கங் குருகுண்ண முத்துதிருங் கேதாரமே. [னைக்

கடுக்கள்தின்று கழிமீன் கவர்வார்கண் மாசுடம்பினர்
இடுக்கணுய்ப்பார் அவர்எய்த வொண்ணாவிட மென்பரால்
அடுக்கநின்றவ் வறவுரைகள் கேட்டாங் கவர்வினைகளைக்
கெடுக்கநின்ற பெருமா னுறைகின்ற கேதாரமே. 10

வாய்ந்தசெந்நெல் விளைகழனி மல்கும்வயற் காழியான்
ஏய்ந்தநீர்க்கோட்டிமையோ ருறைகின்ற கேதாரத்தை
ஆய்ந்துசொன்ன அருந்தமிழ்கள் பத்தும் இசைவல்லவர்
வேந்தராகி உலகாண்டு வீடுகதி பெறுவரே. 11

திருச்சிற்றம்பலம்

## சுந்தரமூர்த்திசுவாமிகள் அருளியது

### பண் – நட்டபாடை

திருச்சிற்றம்பலம்

வாழ்வாவது மாயம்மிது மண்ணாவது திண்ணம்
பாழ்போவது பிறவிக்கடல் பசிநோய் செய்த பறிதான்
தாழாதறஞ் செய்ம்மின்தடங் கண்ணான்மல ரோனும்
கீழ்மேலுற நின்றான்திருக் கேதாரமெ னீரே. 1

பறியேசுமந் துழல்வீர்பறி நரிகீறுவ தறியீர்
குறிகூவிய கூற்றங்கொளும் நாளால்அறம் உளவே
அறிவானிலும் அறிவான்நல நறுநீரொடு சோறு
கிறிபேசிநின் றிடுவார்தொழு கேதாரமெ னீரே. 2

கொம்பைப்பிடித் தொருக்காலர்க ளிருக்கான்மலர் தூவி
நம்பன்நமை யாள்வானென்று நடுநாளையும் பகலும்
கம்பக்களிற் றினமாய் நின்று சுனைநீர்களைத் தூவிச்
செம்பொற்பொடிச் சிந்துந்திருக் கேதாரமெ னீரே. 3

உழக்கேஉண்டு படைத்திட்டிவைத் திழப்பார்களுஞ்
[சிலர்கள்
வழக்கேயெனிற் பிழைக்கேமென்பர் மதிமாந்திய மாந்தர்
சழக்கேபறி நிறைப்பாரொடு தவமாவது செயன்மின்
கிழக்கேசல மிடுவார்தொழு கேதாரமெ னீரே. 4

வாளோடிய தடங்கண்ணியர் வலையிலழுந் தாதே
நாளோடிய நமனார்தமர் நணுகாமுனம் நணுகி
ஆளாயுய்ம்மின் அடிகட்கிட மதுவேயெனி லிதுவே
கீளோடர வசைத்தானிடங் கேதாரமெ னீரே. 5

தளிசாலைகள் தவமாவது தம்மைப்பெறி லன்றே
குளியீருளங் குருக்கேத்திரங் கோதாவிரி குமரி
தெளியீருளஞ் சிபர்ப்பதந் தெற்குவடக் காகக்
கிளிவாழையொண் கனிகீறியுண் கேதாரமெ னீரே. 6

பண்ணின்தமி ழிசைபாடலின் பழவேய்முழ வதிரக்
கண்ணின்ஒளி கனகச்சுனை வயிரம்மவை சொரிய
மண்ணின்றன மதவேழங்கள் மணிவாரிக்கொண் டெறியக்
கிண்ணென்றிசை முரலுந்திருக் கேதாரமெ னீரே. 7

முளைக்கைப்பிடி முகமன்சொலி முதுவேய்களை யிறுத்துத்
துளைக்கைக்களிற் றினமாய்நின்று சுனைநீர்களைத் தூவி
வளைக்கைப்பொழி மழைகூர்தர மயில்மான்பிணை நிலத்
கிளைக்கம்மணி சிந்துந்திருக் கேதாரமெ னீரே. [தைக்

பொதியேசுமந் துழல்வீர்பொதி அவமாவதும் அறியீர்
மதிமாந்திய வழியேசென்று குழிவீழ்வதும் வினையால்
கதிசூழ்கட லிலங்கைக்கிறை மலங்கவ்வரை யடர்த்துக்
கெதிபேறுசெய் திருந்தானிடங் கேதாரமெ னீரே. 9

நாவின்மிசை அரையன்னொடு தமிழ்ஞானசம் பந்தன்
யாவர்சிவன் அடியார்களுக் கடியானடித் தொண்டன்
தேவன்திருக் கேதாரத்தை ஊரன்னுரை செய்த
பாவின்தமிழ் வல்லார்பர லோகத்திருப் பாரே. 10

திருச்சிற்றம்பலம்

சிவமயம்

# திருஅனேகதங்காவதத் திருப்பதிகம்

## திருஞானசம்பந்தசுவாமிகள் அருளியது

### பண் – இந்தளம்

திருச்சிற்றம்பலம்

நீடன் மேவுநிமிர் புன்சடை மேலோர் நிலாமுளை
சூடன் மேவுமறை யின்முறை யாலோர் சுலாவழல்
ஆடன் மேவுமவர் மேயவ னேகதங் காவதம்
பாடன் மேவுமனத் தார்வினை பற்றறுப் பார்களே. 1

சூல முண்டுமழு வுண்டவர் தொல்படை சூழ்கடல்
ஆல முண்டபெரு மான்ற னனேகதங் காவதம்
நீல முண்டதடங் கண்ணுமை பாக நிலாயதோர்
கோல முண்டள வில்லை குலாவிய கொள்கையே. 2

செம்பி னாருமதின் மூன்றெரி யச்சின வாயதோர்
அம்பி னாலெய்தருள் வில்லி யனேகதங் காவதம்
கொம்பி னேரிடை யாளொடுங் கூடிக்கொல் லேறுடை
நம்ப னாமநவி லாதன நாவென லாகுமே. 3

தந்தத் திந்தத்தட மென்றரு வித்திரள் பாய்ந்துபோய்ச்
சிந்த வெந்தகதி ரோனொடு மாசறு திங்களார்
அந்த மில்லவள வில்ல வனேகதங் காவதம்
எந்தை வெந்தபொடி நீறணி வார்க்கிட மாவதே. 4

பிறையு மாசில்கதி ரோனறி யாமைப் பெயர்ந்துபோய்
உறையுங் கோயில் பசும்பொன் னணியா ரசும்பார்புனல்
அறையு மோசை பறைபோலு மனேகதங் காவதம்
இறையெம் மீச னெம்மா னிடமாக வுகந்ததே. 5

தேனை யேறுநறு மாமலர் கொண்டடி சேர்த்துவீர்
ஆனை யேறுமணி சார லனேகதங் காவதம்
வானை யேறுநெறி சென்றுணரு ந்தனை வல்லிரேல்
ஆனை யேறுமுடி யானருள் செய்வதும் வானையே. 6

வெருவி வேழமிரி யக்கதிர் முத்தொடு வெண்பளிங்
குருவி வீழவயி ரங்கொழி யாவகி லுந்திவெள்
அருவி பாயுமணி சாரல னேகதங் காவதம்
மருவி வாழும்பெரு மான்கழல் சேர்வது வாய்மையே. 7

ஈர மேதுமில னாகி யெழுந்த விராவணன்
வீர மேதுமில னாக விளைத்த விலங்கலான்
ஆரம் பாம்ப தணிவான்ற னனேகதங் காவதம்
வார மாகிநினை வார்வினை யாயின மாயுமே. 8

கண்ணன் வண்ணமல ரானொடுங் கூடியோர்க் கையமாய்
எண்ணும் வண்ணமறி யாமையெ ழுந்ததோ ராரழல்
அண்ண லண்ணுமணி சாரல னேகதங் காவதம்
நண்ணும் வண்ணமுடை யார்வினை யாயின நாசமே. 9

மாப தம்மறி யாதவர் சாவகர் சாக்கியர்
ஏப தம்பட நின்றிறு மாந்துழல் வார்கள்தாம்
ஆப தம்மறி வீருளி ராகில னேகதங்
காப தம்மமர்ந் தான்கழல் சேர்தல் கருமமே. 10

தொல்லையூ ழிப்பெயர் தோன்றிய தோணிபு ரத்திறை
நல்ல கேள்வித்தமிழ் ஞானசம் பந்தனல் லார்கண்முன்
அல்ல றீரவுரை செய்தவ னேகதங் காவதம்
சொல்ல நல்லவடை யும்மடை யாசுடு துன்பமே. 11

திருச்சிற்றம்பலம்

உ

திருச்சிற்றம்பலம்

சித்தத் துருகிச் சிவனெம்
    பிரான்என்று சிந்தையுள்ளே
பித்துப் பெருகப் பிதற்றுகின்
    றோர்பிணி தீர்த்தருளாய்
மத்தத் தரக்கன் இருபது
    தோளும் முடியுமெல்லாம்
பத்துற் றுறநெரித் தாய்எம்மை
    யாளும் பசுபதியே.

திருச்சிற்றம்பலம்

—திருநாவுக்கரசு சுவாமிகள்.